இப்பொழுது
நடைபெறுகிறது
சென்னை
பாரகன்
மஹாராணி
உமா
மற்றும்
தென்னெங்கும்.





நரசு ஸ்டூடியோஸ்
# பிரேமபாசம்
தமிழ்

டைரக்ஷன் வேதாந்தம் ராகவய்யா

சாம்ரியா ரிலீஸ்

BHARAT
STUDIO

# டி.வி.எஸ்.

ஸ்தாபனங்கள்

## ஆற்றலுடன் பணியாற்றுகின்றன



டி. வி. சுந்தரம் அய்யங்கார்
& ஸன்ஸ் பிரைவேட் லிமிடெட், மதுரை
மோட்டார் பஸ் லாரி உற்பத்தியாளர்.
கிளைகள்: திருச்சி, திருநெல்வேலி,
புதுக்கோட்டை, சேலம் & கோயம்புத்தூர்



சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிட்.,
நூதன முறையில் டயர் புதுப்பிப்பவர்.
புதுக்கோட்டை & மதராஸ்




மதராஸ் ஆட்டோ சர்வீஸ் பிரைவேட் லிட்.,
மோட்டார் உறுப்பு - உபகரண
விநியோகஸ்தர்,
மதராஸ் & பெங்களூர்



ஸதர்ன் ரோட்வேஸ் பிரைவேட் லிட்.
தேசத்தின் தனிப்பெரும் ரஸ்தா
போக்குவரத்து ஸ்தாபனம்,
மதுரை



சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிட்.,
பியட் & ப்ளிமத் கார், பார்கோ ட்ரக்
வில்லீஸ் ஜீப் யுடிலிடி வான் &
பெர்குஸன் ட்ராக்டர் விநியோகஸ்தர்.
சென்னை - 6



தி மதராஸ் மோட்டார்
இன்ஷூரன்ஸ் கோ., லிட்.,
மதராஸ்






தங்கபஸ்பம்
புகையிலை

THANGABASPAM
TOBACCO-KARAIKUDI.

அருணகிரி
சீயக்காய் பவுடர்.
ARUNAGIRI VILAS

அருணகிரி விலாஸ்
சீயக்காய் பவுடர்

ARUNAGIRI VILAS SOAP-NUT POWDER




V.K. BRAND

STAINLESS STEEL

# UTENSILS

"NEED NO REPLACING TO IT'S NAME"

*It is the Best in Market*

## Manubhai Mulchand & Company.

BEHIND MUMBADEVI P. O. BOMBAY 2.

PHONE: 71534

GRAM: MANMUL






அழகான, உறுதியான
கட்டிட வேலைகளுக்கு

**சங்கர் பிராண்ட்**
**போர்ட்லண்ட் ஸிமெண்ட்**

திடத்திலும், தரத்திலும் தேர்ந்தது

தென்னாட்டின் ஒவ்வொரு முக்கிய நகரத்திலும்
I. C. ஸ்டாக்கிஸ்டுகள் மூலம் வினியோகிக்கப்படுகிறது

**இந்தியா ஸிமெண்ட்ஸ் லிட்... மதராஸ்-1**



# FIRST IN 1904 (WE BUILT IT.)

முதன் முதலாக
இந்தியாவில்
தபால் மற்றும்
பிரயாணிகள்
போக்கு வரத்து



சாதனமாக
ஏற்பட்ட
வண்டியை
நிர்மாணித்து
ஓட்டியவர்கள்
ஸிம்ஸன்ஸ்

# STILL FIRST IN COACH BUILDING



எல்லாவித சேவிஸ்களுக்கும் ஏற்றபடி பாடிகளை நிர்மாணிக்க ஏற்றுக் கொள்கிறோம். தனிப்பட்டவர்களின் தேவைக்கும் திட்டங்களுக்கும் பொருத்தமாகவும் நிர்மாணிக்கிறோம். நீண்ட காலம் நீடித்து நிற்கக்கூடிய பஸ் பாடி வேலையை விரும்பினால், நீங்கள் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டிய சிறந்த ஸ்தாபனம் — ஸிம்ஸன்ஸ்.

**Simpson & Co. Ltd**

**MOUNT ROAD, MADRAS-2.**

**PIONEER COACH BUILDERS IN INDIA SINCE 1840**

கிளைகள் : பெங்களூர் - உதகமண்டலம் - திருச்சிராப்பள்ளி - சிகந்திராபாத் (டெக்கான்)

கல்கி

மலர் 15 இதழ் 37

15 ஏப்ரல் 1956

துன்முகி சித்திரை 3

# பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

தமிழ்ப் புத்தாண்டு மலர்





மலர் 15 | தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற | துன்முகி ௵
இதழ் 37 | தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | சித்திரை ௴ 3

# வருக, வருகவே!

தமிழ்ப் புத்தாண்டு 'ஜாம் ஜாம்' என்று வாத்திய முழக்கங்களோடு வந்தது. ஏட்டுச் சுவடிகளை ஆனைமேல் வைத்து ஊர்வலம் விட்டுக்கொண்டு வந்தது. தமிழ் எழுத்தாளர்கள், — பழம் பெரும் புலவர்களும், புத்திளம் புலவர்களும் – தோளோடு தோள் அணைத்து, கைகோடு கைகோத்துப் பழைமையையும் புதுமையையும் ஒன்றாக இணைத்துக் கொண்டு தமிழ்ப் புத்தாண்டை வரவேற்றார்கள். பெரியோர்களும், தலைவர்களும், அமைச்சர்களும், தமிழ் மொழியின் வளர்ச்சிக்கும், தமிழ் நாட்டின் முன்னேற்றத்துக்கும் பல திட்டங்களையும் யோசனைகளையும் கூறினார்கள். அதுவே தமிழ்ப் புத்தாண்டுக்கு ஒரு நல்ல வரவேற்பாகத் திகழ்ந்தது.

ஆம், சென்ற வாரம் சென்னையில் நடைபெற்ற தமிழ் எழுத்தாளர் மகாநாட்டின் நிகழ்ச்சிகளைப் பார்த்தபோது மேலே கண்ட எண்ணங்கள்தான் நம் மனத்தில் உதித்தன. புத்தாண்டுக்கு ஒரு சுபமான வரவேற்புப் போலவே அமைந்தது ஏப்ரல் ஏழு, எட்டு தேதிகளில் சென்னையிலே நடைபெற்ற எழுத்தாளர் மகாநாடு. இரண்டு நாள் மகாநாட்டிலும் நடைபெற்ற சொற்பொழிவுகளும், விவாதங்களும் இந்த நம்பிக்கையை ஊர்ஜிதப்படுத்தின. நாட்டின் பல பாகங்களிலிருந்தும் இந்த மகாநாட்டுக்கு என்று வந்து கூடியிருந்த பல எழுத்தாளர்கள் மத்தியிலும் நிலவிய அன்பும் ஐக்கியமும் இந்த நம்பிக்கையை மேலும் உறுதிப்படுத்தின.

மகாநாட்டிலே கலந்து கொண்டு, ரசிகமணி டி.கே.சி. அவர்களின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்த ராஜாஜி அவர்கள் தமக்கும் ரசிகமணிக்கும் ஏற்பட்ட அந்த இலக்கிய நட்பைக் 'காதல்' என்றே குறிப்பிட்டுக் காதல் என்ற சொல்லின் புனிதமான பொருளை விளக்கினார். "எங்கள் தொடர்பு பயன் கருதாத நட்பு. அது இலட்சியக் காதல்" என்று குறிப்பிட்டபோது, ராஜாஜியின் இதயத்திலே உள்ள அபாரமான அன்பும், உணர்ச்சியுமே பேசின. தமிழ் நாட்டுப் பெரியார்கள் இருவரிடையே ஏற்பட்ட அத்தகைய நட்பு தமிழ் எழுத்தாளர்களுக்கும் தமிழ் நாட்டு மக்களுக்குமே ஓர் ஆதர்சம் என்று சொல்லும்படியிருந்தது அந்தப் பேச்சு.

* * * *

தமிழ் எழுத்தாளர்களுக்குச் சில அரிய யோசனைகளைக் கூறினார் ராஜாஜி. "கிரேக்கு, லத்தீன் போன்ற மேனாட்டு மொழிகள், ஆயிரம் ஆண்டுகளில் எவ்வளவோ உருமாறிப் போய்விட்டன. பொது மக்களிடமிருந்து மறைந்து இன்று புலவர்களுக்கு மட்டுமே தெரிகிற மொழிகளாகிவிட்டன. லத்தீன் என்பது மறைந்து போய் இதாலியன் ஆகிவிட்டது. ஆனால் நம்முடைய தமிழ் மொழியோ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாகச் சிதையாத வடிவத்தில், திட்டமான உருவத்தில் இன்னும் அப்படியே இருந்து வருகிறது. இதற்குக் காரணம், தினசரிப் பேச்சுக்களில் ஊருக்கு ஊர் ஜில்லாவுக்கு ஜில்லா பாஷையின் போக்கு மாறுபட்டபோதிலும், எழுத்திலும் மேடைச் சொற்பொழிவுகளிலும், மரபோடு கூடிய திருத்தமான தமிழ் நடையையே நாம் பாதுகாத்து வந்தது தான்!" என்று விளக்கினார் ராஜாஜி. 'இதை, இன்றைய எழுத்தாளர்கள் எல்லாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். கரடு முரடான சொற்களை உபயோகிக்காமல் எல்லாருக்கும் புரிகிற முறையில் எழுதவேண்டியது அவசியந்தான். ஆனால் தமிழ் மரபிலிருந்து பிசகாமல், இலக்கணப் பிழைகள் இல்லாத திருத்தமான நடை



திரு டி. வி. சதாசிவப் பண்டாரத்தார்

யில் எழுத வேண்டும். அகஸ்திய முனிவர் வந்து இன்றையத் தமிழைப் படித்தாலும் குற்றம் காணமுடியாத முறையில் இருக்க வேண்டும். இதுவே என் அபிப்பிராயம்'' என்றார் ராஜாஜி. இந்த அபிப்பிராயத்தை ஒட்டிய இன்னொரு கருத்தைக் கல்வி மந்திரி திரு சுப்பிரமண்யம் அவர்களும் தமது விழாத் தொடக்க உரையில் குறிப்பிட்டார். ''இன்று அரசியல் துறையிலாகட்டும், இலக்கியத் துறையிலாகட்டும் ஒரு தவறான கருத்து வழங்குகிறது. அதாவது பொது மக்களுக்கு எது பிடிக்கிறதோ அதுவே எங்கள் பணி, எங்கள் கொள்கை என்று அரசியல் தலைவர்களும், எழுத்தாளர்களும் சொல்லியும் நடந்தும் வருகிறார்கள். அது தவறு. பொது மக்களுக்கு எது நன்மை, எது வேண்டும் என்பதை ஆராய்ந்து நல்ல விஷயங்களையும், நல்ல கருத்துக்களையுமே அவர்களுக்கு வழங்க வேண்டும். கட்சிக் குழப்பங்களுக்குள்ளே சிக்கிக் கொள்ளாமல் எழுத்தாளர்கள் நிரந்தரமான முறையில் தமிழ் வளர்ச்சியையே இலட்சியமாகக் கொண்டு தமிழை வளம்படுத்த வேண்டும்'' என்றார் கல்வி மந்திரி.

இந்தக் கருத்துக்கள் எல்லாம் தமிழ்ப் புத்தாண்டில் தமிழ் எழுத்தாளர்களும், தமிழ் மக்களும் எடுத்துக் கொள்கிற புது வருஷத் தீர்மானங்களாக இருந்து செயலிலே மலர வேண்டும் என்று விரும்புகிறோம்.

எழுத்தாளர்கள் மகாநாட்டிலே கம்ப ராமாயணத்தை முழு வடிவில், காண்டம் காண்டமாக உரையோடு வெளியிட்டுத் தமிழுக்கு உன்னதமான சேவை செய்துள்ள வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் அவர்களுக்கும், இருண்ட சரித்திர காலத்திலே ஒளியை வீசித் திசை தடுமாறிய தமிழ் மாலுமி'களுக்கு நிரந்தரமான 'கலங்கரை விளக்கமாக'ப் பல அரிய ஆராய்ச்சிகள் செய்து தமிழ் மொழியும், உண்மையான ஆராய்ச்சிகளும் உள்ளவரை தமது பெயர் நிலைத்து நிற்கும் வகையில் ஈடு இணையற்ற சேவை செய்துள்ள சதாசிவப் பண்டாரத்தார் அவர்களுக்கும் கேடயம் வழங்கிக் கௌரவித்தது, எழுத்தாளர் சங்கம். தமிழ் மொழிக்கும், தமிழ் இலக்கியத்துக்கும், தமிழ் நாட்டின் சரித்திரத்துக்கும் எழுத்தாளர் சங்கம் செய்த அஞ்சலியாகவே இதை நாம் கருதுகிறோம். தமிழன்னைக்குச் செய்த அஞ்சலியே தமிழ்ப் புத்தாண்டுக்குக் கூறும் நல் வரவேற்பும் ஆகும்.

மன்மத வருஷம் நகர்ந்தது. புயலும் மழையும் அதை அடித்துக்கொண்டு போய்விட்டன. இன்று பிறக்கும் துன்முகி இன்முகியாக விளங்க வேண்டும் என்றும், தமிழ் நாட்டு அரசியலிலும் தமிழ் இலக்கிய வளர்ச்சியிலும் தமிழ் மக்களின் முன்னேற்றத்திலும் புதிய புதிய நன்மைகள் விளைய வேண்டும் என்றும் ஆசைப்படுகிறோம். ''மந்திரிகளின் சமயோசித நடப்பினால் ஜனங்களுக்குச் சௌக்கியம் உண்டாகும்!'' என்று புது வருஷப் பஞ்சாங்கம் பலன் சொல்கிறது. ''மிக்கான துன்முகியில் வேளாண்மை பெருமே'' என்று சோதிடம் கூறுகிறது. எந்த நம்பிக்கை எப்படி யிருந்தாலும், இந்த ஒரு விஷயத்தில் நிச்சயம் பஞ்சாங்கப் பலனை நம்புவதற்கு எல்லாருமே ஆசைப் படுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. அந்த முழு நம்பிக்கையோடு தமிழ்ப் பெரு மக்களின் ஏகோபித்த குரலாகப் புத்தாண்டுக்கு நல்வரவு கூறுகிறோம். ''வருக வருகவே!'' என்று வாழ்த்தி வரவேற்கிறோம்.



திரு வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார்

# முறை தவறிய பி.ஸி.ஜி

**பி.** ஸி. ஜி யைப் பற்றி பிரிட்டன் ஆரோக்கிய இலாக்காவில் வைத்திய நிபுணர்கள் இன்னும் சோதனையும் ஆராய்ச்சியும் செய்து கொண்டு வருகிறார்கள். முடிந்ததாக இல்லை. இடையில் அவர்கள் ஒரு அறிக்கை வெளியிட்டதைக் குறிப்பிட்டுச் சென்னை சர்க்கார் தங்கள் அறிக்கை யொன்றை வெற்றி கோஷத்துடன் சுருக்கமாக வெளியிட்டிருக்கிறார்கள். பிரிட்டிஷ் கமிட்டியார் வெளியிட்ட நடுவாந்தர அறிக்கை 'பிரிட்டிஷ் மெடிகல் ஜர்னல்' என்ற பத்திரிகையில் பூரணமாக வெளியாகி யிருக்கிறது. ஆங்கில அதிகாரிகள் எவ்வளவு நிதானமாகவும் ஜாக்கிரதையாகவும் இருக்கிறார்கள் என்று அந்த அறிக்கையைப் படித்து நாம் வியப்படைந்தோம். அத்தகைய நிதானத்தையும் ஜாக்கிரதையையும் நம்முடைய சர்க்கார் காட்டவில்லையே என்று வருந்தவும்செய்தோம். கணக்காகப் பார்த்து, பொறுக்கி, எண்ணிச் சிலருக்குக் குத்தினார்கள்; சிலருக்குக் குத்தாமல் விட்டு இருபாலாரையும் இரண்டு ஆண்டுகள் கவனித்து வந்தார்கள். குத்தின குழந்தைகளின் நிலையையும் அடிக்கடி கவனித்து வந்தார்கள். பன்னிரண்டு வயதுக்குக் கீழ்ப்பட்ட குழந்தைகளுக்குக் குத்தியதால் நன்மையுண்டு என்று ஊகிக்க இடமிருக்கிறது என்று கருதுகிறார்கள். இன்னும் நீடித்த பரீட்சையின் பயனைக் கண்டறிய விரும்புகிறார்கள். இது ஆங்கில வைத்தியக் கமிட்டியின் நடுவாந்தர முடிவு. சர்க்காராவது, வைத்தியர்களாவது தீர்மானமான முடிவுக்கு இன்னும் வரவில்லை. மக்களுக்குப் பெருவாரி முறையில் குத்த ஆரம்பிக்க வில்லை என்பதைச் சொல்ல வேண்டியதேயில்லை. குழந்தைகளுக்குக் குத்தி அடைந்த பயன் எத்தனை காலத்துக்குத் தாங்கும் என்பதையும் இன்னும் கண்டு முடிவு செய்யவில்லை. ஊசி குத்திய குழந்தைகளிடையே க்ஷய நோய் கண்ட கணக்குக் குறைவு என்றும், குத்தாத குழந்தைகளிடையே க்ஷய நோய் கண்ட கணக்கு அதிகம் என்றும் இரண்டு வருஷப் பரீட்சையிலிருந்து என்ன முடிவுக்கு வரக்கூடும் என்பதை நாம் யோசனை செய்ய வேண்டும்.

பெரிய சந்தேகம் என்ன வென்றால் பிரிட்டனில் இன்னும் ஆராய்ச்சிதான் நடந்து கொண்டிருக்கிறது. பெருவாரி ஊசிக்குத்து ஆரம்பிக்கப் படவில்லை. இந்தத் தேதியிலும் ஆராய்ச்சி முடிவு பெறவில்லை. அப்படி யிருக்க நம்முடைய நாட்டில் எந்த ஆதாரத்தைக் கொண்டு ஒன்பது வருஷத்துக்கு முந்தியே பெருவாரி ஊசிக்குத்தை ஆரம்பித்தார்கள்! அமெரிக்காவில் பி. ஸி. ஜி யைப் பற்றி நம்பிக்கையே இல்லை. பிரிட்டனில் சந்தேகமும் ஆராய்ச்சியும். இந்தியாவில் பிடிவாதம். இந்த நிலைமை நமக்கு விளங்கவில்லை.

* * *

"**பி.** ஸி.ஜி பிரயோகம் செய்யலாம் என்று ஆரம்பித்து முப்பது ஆண்டுகளாயின. ஆயினும் இன்னும் அந்தக் காரியம் பிரிட்டனில் வரம்புகள் கட்டித்தான் நடைபெற்று வருகிறது. அநேக லக்ஷம் பேருக்குக் குத்தியபோதிலும் இந்த பி. ஸி. ஜியைப் பற்றி, அது பயன் தருமா இல்லையா என்பதைப் பற்றி அபிப்பிராய பேதம் இன்னும் இருந்து கொண்டே யிருக்கிறது" என்று 1956 பெப்ருவரி 25-ந் தேதி பிரிட்டிஷ் மெடிகல் ஜர்னல் கட்டுரையில் ஆரம்பத்திலேயே தெளிவாகச் சொல்லப் பட்டிருக்கிறது.

ஊசிக் குத்துக்குச் சம்மதித்தவர்களின் ஆரோக்கிய நிலையைப் பற்றி பிரிட்டனில் இடைவிடாமல் கவனித்துப் பார்த்து வருகிறார்கள். குத்தப்பட்டவர்களின் சரித்திரம் முழுதும் திட்டமாக மத்திய ஆபீஸில் சேகரித்து வைக்கிறார்கள். அதைப் பற்றிப் பட்சபாதமற்ற வைத்தியர்களின் அபிப்பிராயத்தை நாடுகிறார்கள். இதற்கும் நம்முடைய நாட்டில் நடைபெறும் முறைக்கும் எவ்வளவு வித்தியாசம்!

இங்கிலாந்தில் தற்போது செய்யும் முறையில் உள்ள ஜாக்கிரதையும் நிதானமும் நம்முடைய சர்க்காரும் மேற்கொண்டு நடத்தினால் பொறுத்துக் கொள்ளலாம். பிரிட்டனில் மக்களின் ஆரோக்கிய நிலையும் உணவு நிலையும் என்ன! நம்முடைய மக்களின் நிலை என்ன என்பதையும் கவனத்தில் வைத்துக் கொண்டு சரியான முறையில் பெற்றோர்களின் சம்மதத்தையும் பெற்றுக் கொண்டு பரீட்சை செய்தால் யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள். இங்கிலாந்தில் கோல் பிடித்து நடக்கும்போது நாம் இங்கே கண்மூடிக் கொண்டு ஓடப் பார்க்கிறோம்.

இன்னொரு விஷயம்: இங்கிலாந்தில் சமீபத்தில் ஒரு வழக்கு நடந்தது. பி. ஸி. ஜி குத்துவதற்கு முந்திச் செய்யப்படும் சோதனை ஊசி ஒரு குழந்தைக்குக் குத்தப்பட்டது. பெற்றோர்களின் சம்மதம் பெறாமல் செய்யப்பட்டது என்று வழக்கு. ஒரு குழந்தையின் விஷயத்தில் பெற்றோர்கள் சம்மதித்திருந்தார்கள் என்பதனால் அந்தக்குழந்தையோடுகூட வந்திருந்த இன்னொரு குழந்தைக்கும் டுபெர்குலின் சோதனை ஊசிக்குத்து செய்தார்கள். இது பெருந் தவறு என்று நீதிபதி 200 பவுன் நஷ்ட ஈடு கொடுக்கும்படி விதித்தார். சோதனை ஊசிக்குத்துக்கே நீதிபதியின் தண்டனை இவ்வளவு கடுமையாக விதிக்கப்பட்டது! மக்கள் உரிமைகளுக்கு பிரிட்டனில் வழங்கும் பாதுகாப்பு அத்தகையது.

அட்டைப்படம்

## புது வருஷ வரவேற்பு

**த**மிழர்களுக்குத் தமிழ்ப் புத்தாண்டு வருகிறது என்றால் தனி உற்சாகம்: தாய்க்குலத்துக்குத் தனிக் குதூகலம். அந்தக் குதூகலத்தை வீட்டு வாசற்படியே சொல்லும்!

துன்முகி ஆண்டை வரவேற்க இதோ ஒரு தாய் முனைந்து விட்டாள். வீட்டு வாசலை மெழுகிக் கோலமிட்டு, வர்ணமிட்டுச் சிங்காரிக்கும் மங்கலக் காட்சியை நமது ஓவியர் மணியம் குங்குமமும் மஞ்சளும் கலந்த பான்மையில் சித்திரித்திருக்கிறார். தமிழ்ப் புத்தாண்டில் 'வீடு தோறும் கலையின் விளக்கமும்' வீடுதோறும் மங்கல மகிழ்ச்சியும் நிலவுமாக!

# என்ன செதி?

## பி. ஸி. ஜி செய்தி :
### சர்க்கார் அறிக்கை

1956 பெப்ருவரி 'கல்கி' இதழில் பி. ஸி. ஜி மருந்து போட்டுக் கொண்டதால் போனிடா பிட்டர்ஸ் என்னும் பத்து வயதுடைய கூனூர் ஸ்டேன்ஸ் உயர் தரப்பள்ளி மாணவியின் கண் பார்வை பாதிக்கப்பட்டுவிட்டதாகப் பிரசுரிக்கப்பட்டிருந்ததைப் பற்றிச் சர்க்காரிலிருந்து ஒரு அறிக்கை நமக்கு வந்திருக்கிறது. அதில் இந்தப் பெண் ஏப்ரல் 21-ம் தேதி பி.ஸி.ஜி ஊசி குத்தப்பட்டாள் என்றும், 1955 நவம்பர் 29-ம் தேதி டோனகொண்டாவுக்கு அப்பெண் பள்ளிக்கூட விடுமுறையில் போனதாகவும், ஏதோ கண் கோயினால் தங்கள் மகள் துன்புறுவதைக் கண்ட அந்தச் சிறுமியின் பெற்றோர்கள் ஒரு டாக்டரிடம் காண்பித்தார்கள் என்றும், கண் திறக்க முடியாததையும், படிக்கும் போது எரிச்சல் காணுவதையும் பற்றி அந்த டாக்டர் பரிசோதித்தார் என்றும் வைட்டமின் சத்தும், ஊசி மூலம் வைட்டமின் 'ஏ' சத்தும் கொடுக்கப்பட்ட பிறகு, சுமார் ஐந்து வாரங்களில் கண் சரியான நிலையை அடைந்து விட்டது என்றும், பார்வையில் அபிவிருத்தி ஏற்பட்டது என்றும் கூறப்படுகிறது. மேற் குறிப்பிட்டுள்ள விவரங்களிலிருந்து பி. ஸி. ஜி ஊசியினால் அந்த மாணவியின் கண் பார்வை பாதிக்கப்பட்டது என்று சொல்வதற்கு இடமில்லை என்பது சர்க்கார் அபிப்பிராயம். ஆனால் இதைக் குழந்தையைப் பெற்ற தாய் ஒப்புக் கொள்ள மாட்டாள்.

## சேவைக்குப் பாராட்டு

இன்று நம்மிடை வாழ்ந்து வரும் பெரிய டாக்டர்களில் டாக்டர் குருஸ்வாமி முதலியார் முதன்மையானவர். அவரது அரிய சேவையைப் பாராட்டி ஒரு விழா நடத்தி, ஞாபகார்த்தமும் நிறுவ வேண்டுமெனச் சென்னையில் ஏப்ரல் 7-ம் தேதி ராஜாஜி ஹாலில் பிரமுகர்கள் அடங்கிய பொதுக் கூட்டம் நடைபெற்றது. தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

சென்னை கவர்னர் ஸ்ரீ பிரகாசா அவர்கள் தலைமை வகித்தார். ராஜாஜி, திரு எம். ஏ. முத்தையா செட்டியார், சபா நாயகர் என். கோபால மேனன், நீதிபதி பஷீர் அஹமத் முதலியோர் குருஸ்வாமி முதலியார் அவர்களின் அரும் பண்புகளையும் சேவைகளையும் பற்றிப் பேசினார்கள்.

தீர்மானத்தைப் பிரேரேபித்த ராஜாஜி அவர்கள், "உண்மையிலேயே நல்ல மனிதர் ஒருவரை வர்ணிப்பது கஷ்டம். டாக்டர் குருஸ்வாமி முதலியார் நமது காலத்திய நல்ல சிறந்த புருஷர்களில் ஒருவர். இக்காலத்தவரின் அறிவு அனைத்தையும் டாக்டர் குருஸ்வாமி முதலியார் பெற்றிருக்கிறார். இருந்தாலும் நமது புராதன மக்கள் போல எளிமையும் குணப் பண்பும் பெற்றிருக்கிறார். இவ்விதம் அமைவது சுலபமல்ல" என்று பாராட்டினார்.



இத்தகைய அரும் டாக்டருக்குப் பொது மக்கள் தங்கள் மனப் பூர்வமான நன்றியைச் செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறார்கள். கோடிக் கணக்கான பேர் அவரிடம் இது வரை சிகிச்சை பெற்றிருப்பார்கள். அவர் பணம் கருதாது செய்த சேவை மிகப் பெரிது. அவரைப் பற்றி, அவரது வைத்தியத் திறமையைப் பற்றித் தமிழ் நாட்டில் மூலை முடுக்குகளில் எல்லாம் பேசக் கேட்கலாம்! இப்போது அவரைப் பாராட்ட ஒரு நிதி எழுப்பப் படுகிறது. அந்த நிதிக்கு நமது சென்னை கவர்னர் சென்ற சனிக்கிழமை நடைபெற்ற கூட்டத்தில் ரூ. 500 வழங்குவதாக அறிவித்திருக்கிறார்.

இப்படி கவர்னர் துவக்கி வைக்கும் நிதி லட்சக் கணக்கில் பெருகி டாக்டர் முதலியார் அவர்களின் புகழ் தமிழ் நாட்டில் என்றென்றும் நிலைத்திருக்கத் தமிழ் மக்கள் வழி செய்வார்கள் என்று நம்புகிறோம்.

## அகதிகள் குறித்து
### நேருஜி கவலை

சுதந்திரம் பெற்றதும் பெறுததுமாகப் பாரத நாடு அதி பயங்கரமான ஒரு நெருக்கடியைச் சமாளிக்க நேர்ந்தது யாவரும் அறிந்த விஷயமாகும். சொத்து சுதந்திரத்தையும் உற்றார் உறவினரையும் விட்டு விட்டு இடம் பெயர்ந்து வந்த லட்சக்கணக்கான அகதிகளைப் பற்றியே குறிப்பிடுகிறோம். சுதந்திரத்தையே விழுங்கும் பூதம் போல் வகுப்பு வெறியால் ஏற்பட்ட அகதிகள் பிரச்னை, பயங்கர உருவம் எடுத்

நுப் பாரத நாட்டை அல்லோலகல்லோலப் படுத்தி விட்டது. அதிர்ஷ்டவசமாக அந்தப் பூதத்தினிடமிருந்து சுதந்திரம் பாதுகாக்கப்பட்டது. அகில உலகையும் திடுக்கிட வைத்த அந்தப் பிரச்னையைச் சமாளித்ததற்காகப் பாரத நாடு உலக நாடுகளின் பாராட்டுதலையும் பெற்றது.

அந்தப் பிரச்னை அடியோடு தீர்ந்து விடவில்லை. எனினும், இனி அதனால் பெரும் கவலை எதுவும் ஏற்படுவதற்கில்லையென எல்லோரும் ஆறுதல் அடைந்தனர். ஆனால், அந்த ஆறுதலுக்கும் ஒரு கவலை இப்போது உண்டாகி யிருக்கிறது. கிழக்குப் பாகிஸ்தானிலிருந்து அகதிகள் வெளியேறி மேற்கு வங்காளத்துக்கு வருவது மறுபடியும் அதிகமாகி யிருப்பதைக் குறித்து நேருஜி மக்கள் சபையில் தமது கவலையைத் தெரிவித்துள்ளார்.

“பாகிஸ்தான் பிரிக்கப் பட்டபோது கிழக்கு வங்காளத்தில் 3 கோடியே 90 லட்சம் மக்கள் இருந்தனர். அவர்களில் 1 கோடியே 25 லட்சம் பேர் ஹிந்துக்கள் ஆவர். சென்ற சில வருஷங்களில் அங்கிருந்து 40 லட்சம் ஹிந்துக்கள் இந்தியாவுக்கு வந்து விட்டார்கள். சமீப காலமாக அங்கிருந்து ஹிந்துக்கள் வெளியேறி மேற்கு வங்காளத்துக்கு வருவது அதிகமாகி விட்டது. பிரதி மாதமும் சுமார் 50,000 பேர்கள் வெளியேறி வந்து கொண்டிருக்கிறார்கள். இதன் காரணமாக இந்தியாவில் மாத்திரமின்றிப் பாகிஸ்தானிலும் விபரீத விளைவுகள் ஏற்படும்” என்று நேருஜி கூறியுள்ளார்.

மேற்கு வங்காளத்துக்கு வந்துள்ள அகதிகளில் பெரும்பாலோர் விவசாயிகள். அவர்கள் நிலத்தில் மிக்க பற்று உடையவர்கள். அப்படிப்பட்டவர்கள் தங்கள் நிலபுலன்களை விட்டு விட்டு வெளியேற வேண்டுமாயின், அதற்குத் தகுந்த காரணம் இருக்க வேண்டும். தங்களுக்குப் பாகிஸ்தானில் எதிர்கால வாழ்வு இல்லை என்று நிச்சயமாகத் தெரிந்தாலன்றி அவர்கள் தலைமுறை தலைமுறையாக வாழ்ந்து வரும் இடத்திலிருந்து வெளியேறி யிருக்க மாட்டார்கள். தங்களுக்குப் பாகிஸ்தானில் போதிய பாதுகாப்பு இல்லை என்ற அவநம்பிக்கையே அவர்களின் வெளியேற்றத்துக்குக் காரணம் எனலாம்.

அகதிகள் வெளியேற்றத்தினால் இரு நாடுகளிலும் விபரீத விளைவுகள் ஏற்படும் என்று நேருஜி கூறியிருப்பது, பாகிஸ்தானுக்கும் உற்றதோர் எச்சரிக்கையாகும். எனவே, கிழக்குப் பாகிஸ்தானில் உள்ள ஹிந்துக்களின் நம்பிக்கைக்குப் பாத்திர

## தலைவலி தீருமா?




பாரதத்தின் தலைவலியாக இருந்து வரும் காஷ்மீர்-கோவாப் பிரச்னைக்குப் புத்தாண்டில் ஒரு முடிவு ஏற்படும் என்று எதிர்பார்க்கிறோம்.



ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் ஜனாதிபதி விருது பெறுவதற்காகத் தில்லிக்குப் புறப்பட்டுச் சென்றார். சென்ற ஐந்தாந் தேதி காலை 'கல்கி' மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ சதாசிவம் அவர்களையும் ஸ்ரீமதி எம். எஸ். அவர்களையும் சென்னையிலுள்ள பல பிரமுகர்களும், சங்கீத சபையினர்களும், ரஸிகர்களும் சென்னை சென்டிரல் ஸ்டேஷனுக்குத் திரளாக வந்திருந்து வழியனுப்பினர்.

மாகும்படி பாகிஸ்தான் அதிகாரிகள் நடந்து கொண்டாலன்றி, அகதிகள் பிரச்னையால் இந்தியா மாத்திரமல்ல, பாகிஸ்தானும் கலங்கும்படியான நெருக்கடி உருவாகலாம். அதற்குச் சிறிதும் இடம் கொடுக்கக் கூடாது.

## வர்த்தகம் பெருகட்டும்!

சில மாதங்களுக்கு முன்னால் ருஷ்யத் தலைவர்கள் ஸ்ரீ புல்கானினும் குருஷ்சேவும் பாரத நாட்டுக்கு விஜயம் செய்தார்களல்லவா? அந்த விஜயத்தின் பயனாக இரு நாடுகளும் பரஸ்பரம் மகத்தான பல அநுகூலங்களைப் பெற்று வருகின்றன. அவற்றுள், சமீபத்தில் இந்தியாவுக்கும் ருஷ்யாவுக்கும் இடையில் புது டில்லியில் கையொப்பமான வர்த்தகக் கப்பல்கள் விடும் ஒப்பந்தமாகும்.

இந்த ஒப்பந்தப்படி பாரதம் ஆறு கப்பல்களையும், ருஷ்யா ஆறு கப்பல்களையும், அனுப்பப் போகின்றன. எனவே இனி இந்திய சோவியத் வர்த்தகப் பரிவர்த்தனை யாவும் இந்தக் கப்பல்கள் மூலமே நடைபெறும்.

இதன் பயனாக, இரு நாடுகளின் வர்த்தகமும் பொருளாதாரமும் பரஸ்பரம் வளம் பெற்று மகோந்நதத்தை அடையும் என்று எதிர்பார்க்கலாம். ஐந்தாண்டுத் திட்டத்தின் இரண்டாவது கட்டத்திலுள்ள நமக்கு இத்தகைய வர்த்தகக் கப்பல் போக்குவரத்து ஒப்பந்தம் ஒரு பெரிய வரப்பிரசாதம் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. இத்தகைய உடன்படிக்கை ஒன்று போலந்து நாட்டுடனும் கையெழுத்தாகும் என்பதை அறிந்து பெரிதும் மகிழ்கிறோம்.

## காந்தி மகன் காந்தி

கடந்த முப்பத்திரண்டு ஆண்டு காலமாகத் தென் ஆப்பிரிக்காவில் மனித உரிமைக்காக அரும்பாடு பட்டு வந்த ஸ்ரீ மணிலால் காந்தி காலமானார் என்ற செய்தி அனைவரையும் பெரும் துக்கத்தில் ஆழ்த்தியது.

ஸ்ரீ மணிலால் காந்தி மகாத்மாஜியின் இரண்டாவதுபுத்திரர். மணியான புதல்வர்.

காந்தி மகாத்மா முதன் முதலாக சத்தியப் போர் தொடங்கியது தென் ஆப்பிரிக்காவில்தான். அங்கு இந்தியர்களுக்கு எதிராக வெள்ளைச் சாதியார் பெரிய அநீதி இழைத்தார்கள். நிறத் துவேஷத்தையும் இனத்துவேஷத்தையும் அடிப்படையாகக்

கொண்ட பாகுபாடுகளுடன் சட்டங்களை இயற்றினர். இந்த அக்கிரமத்தையும் அநீதியையும் எதிர்த்து மகாத்மாஜி தமது முதல் சத்தியப்போரை அங்கே துவக்கினர். அன்று தொடங்கிய தந்தையின் புனிதப் பணியை, அதே அறவழியில் தமது 68-வது வயதுவரை திறம்பட நடத்திப் பெரும் புகழ் எய்தினர் மணிலால். நேட்டாலில் உள்ள போனிக்ஸ் காலனியில் காந்தி மகான் ஆரம்பித்து வைத்த ஆசிரமத்தில் தங்கியிருந்து 'இந்தியன் ஒபீனியன்' என்னும் பத்திரிகையைச் சிறப்பாக நடத்திப் பெரும் சேவை செய்தார். மனித உரிமைக்காக மாபெரும் இயக்கங்கள் நடத்திப் பல தடவை சிறைவாசத் தண்டனை அனுபவித்தார். தந்தையைப் போலவே மகனும் சீரிய குணங்களும் சிறந்த லட்சியங்களும் கொண்ட உத்தம புருஷராய் விளங்கினர். தென் ஆப்பிரிக்காவில் அவர் இந்தியர்களின் சுதந்திரத்துக்காகவும், நிறத்துவேஷத்தையும் இனவேற்றுமையையும் ஒழிக்கவும் பட்ட பாடு சரித்திரத்தில் பொன்னெழுத்தில் பொறிக்க வேண்டிய உண்மைகளாகும்.

## முட்டுக்கட்டை வேண்டாம்!

நரி இடமாகவும் வரவேண்டாம், வலமாகவும் வர வேண்டாம், மேலே விழுந்து பிடுங்காமல் இருந்தால் போதும் என்று நினைக்கும்படி இருக்கிறது நமது சென்னை சர்க்காரின் அறிக்கை. சென்னை நகரசபை ஒரு நல்ல காரியம் செய்ய முன்வந்தது. சென்னை நகரில் உள்ள ஏழை எளிய மக்களும், மத்தியதர மக்களும் உபயோகப்படுத்தும் சைக்கிளுக்கு லைசென்ஸ் வரியை ரத்து செய்ய ஏற்பாடு செய்தது. அதைப் பார்த்து எல்லாரும் பாராட்டினர்கள். நகரசபையார் செய்திருக்கும் நல்ல காரியத்தைப் போற்றினர்கள். இந்தக் காரியம் நடைபெறாமல் இருப்பதற்கு இப்பொழுது ஒரு பெரிய முட்டுக்கட்டை ஏற்பட்டிருக்கிறது. சென்னை நகரசபையார் சைக்கிள் வரியை ரத்து செய்ததைச் சர்க்கார் ஏற்றுக் கொள்வதற்கு மறுத்து விட்டது. சைக்கிள் லைசென்ஸிலிருந்து கிடைக்கும் தொகைக்கு மாற்றாக வருமானம் வரும் வேறு வழி என்ன என்று கேட்டிருக்கிறது? சென்னை நகரசபை பட்ஜெட்டைச் சமர்ப்பிக்கும் போதே சைக்கிள் வரிக்கு விலக்கு அளித்தும் துண்டு விழாமல் சமர்ப்பித்திருந்தது. இது போதாதா? சர்க்கார் தாங்கள் ஏதாவது ஏழை எளிய மக்களுக்கு வரி விலக்குக் கொடுக்க முன் வரா விட்டாலும் சென்னை நகரசபை செய்திருக்கும் நல்ல காரியத்துக்கு அங்கீகாரமாவது அளித்து பல்லாயிரக்கணக்கான ஏழை மக்களுக்கு உதவி செய்ய முன் வரக் கூடாதா?

# கலைநகரிலே! சுப்புடு

## நாரதர் ராவும் நாற்பது நடிகர்களும்

ஏதோ "அலிபாபாவும் நாற்பது திருடர்களும்" மாதிரி இருக்கிறதென்று மலைக்காதீர்கள். கர்நாடக சங்கீத சபையினரும் தக்ஷிண பாரத சமாஜத்தினரும், ஒரு குடைக் கீழ் நடத்திய நாடக விழாவில் நாரதர் சீனிவாச ராவ் அரங்கேற்றிய மூன்று நாடகங்களைப் பற்றிய விவரம் இது.

வசூலைப் பற்றிய வரை பெருமிதமான வெற்றியாய் அமைந்தது இந்த வைபவம். "ஸரஸா", "தங்கப்பதுமை", "டாக்டரும் பேயும்" முதலிய மூன்று நாடகங்களும் முறையே மார்ச் 24, 25, 26-ம் தேதிகளில் டில்லி வாசிகள் கண்டு களித்தனர்.

"ஸரஸா": இது வரை 99 தரம் நடிக்கப் பட்டதென்றும், புது டில்லியில் 100வது தடவையாக அரங்கேற்றப்பட்டதாகவும் அறிவிக்கப்பட்ட இந்த நாடகம் பழங் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டது. அசட்டுப் பிள்ளையாய் நடித்த திரை நடிகர் திரு பி. டி. சம்பந்தம் அப்ளாஸுகளை அள்ளிக் கொண்டு போனார். வில்லனாக வந்த ஜெயராமனின் நடிப்பு சிறப்பாயிருந்தது.

## தங்கப் பதுமை—டாக்டரும் பேயும்

இவை ஆங்கிலக் கதைகளைத் (Taming of the Shrew, Dr. Jekyll & Hyde) தழுவியோ கழுவியோ, எழுதப்பட்ட நாடகங்கள். தங்கப் பதுமை, மமதை கொண்ட மனையாட்டியைச் சீர்திருத்த ஒரு கணவன் கையாளும் முறைகளைச் சித்திரிக்கிறது. வழக்கம்போல், ஹாஸ்ய நடிகர்கள் பி. டி. சம்பந்தமும், வாதிராஜும் வெடிகள் வெடித்துச் சபையோரைக் குதூகலப்படுத்திக் கொண்டேயிருந்தார்கள். 'டாக்டரும், பேயும்' ஒரு நல்ல முயற்சி. கதாநாயகனாக நடித்த ஸ்ரீ வி. ஜி. விஸ்வநாதன் பிரத்தியேகமாகப் பம்பாயிலிருந்து வந்தவர். தாம் ஏற்கும் பாத்திரத்தோடு ஒன்றி விடுகிறார். ஆனால், தமிழ் மழலை. உஷாவாக நடித்த நடிகை குமாரி வி. ஆர். ராஜகுமாரியின் நடிப்பு ரொம்ப கச்சிதம். கனை பொருந்தும் முகவெட்டுக் கொண்ட இவர் பாவ பூர்வமாய் நடித்தார். குமாரி எஸ். வி. வஸந்தாவின் பாட்டும் நடிப்பும் ஜோர்.

'நாரதர் கலகம் நன்மையில் முடியும்' என்பது மூதோர் வாக்கு. டில்லி வாசிகள் மனத்தில் நாடக அவா என்ற கலக விதையை விதைத்து விட்டுப் போய்விட்டார். கூடிய சீக்கிரம் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் டி. கே. எஸ். சகோதரர்கள் வருகிறார்கள் என்று அறிகிறேன். நல்ல செந்தமிழையும், நாடகப் பண்பையும் கண்டு, கேட்டுக் களிக்கக் காதைத் தீட்டித் தயாராயிருக்கிறோம்.

வஸந்தசேனை:—ஏழைக்குத் தகுந்த எள்ளுருண்டையாயிருக்கும் என்று நான் எண்ணிய தென்னிந்தியக் கழகத்தாரின் வஸந்தசேனை, நாடகம், பல விதங்களில் சிறப்பாய் அமைந்தது. கதை பிரபலமானது. சில சிறந்த அம்சங்கள் மாத்திரம் குறிக்கிறேன்.

காட்சி ஜோடனை:—திரு ஜனார்த்தனன், ராஜகோபாலன், ஈஸ்வரன் ஆகிய மூன்று இளைஞர்கள், புதை பொருள் இலாகாவில் புகுந்தும், பழைய 'கல்கி' இதழ்களைக் குடைந்தும், பாடுபட்டு இரவு பகல் பாராது உழைத்தும், காட்சிகளை நிர்மாணித்திருந்தார்கள்.

நடிப்பு:—சகாரனாக வந்த பரசுராமன், வஸந்த சேனையாக நடித்த உமா, ஆர்யகனாக வந்த நாகராஜன், ஏன்! சிறு பாலகனாக வந்த அருவன் எல்லாரும் சோடையில்லாமல் நடித்தார்கள். சங்கீதம்: மருந்துக்குக் கூட ஒரு பாட்டுக் கிடையாது. பிழைத்தோம். வசனம்: சிறந்த கலை ரஸனையுடன் தயாரித்த வசன கர்த்தா ஸ்ரீநிவாசன் நமது பாராட்டுக்குரியவராகிறார்.

நாடகம் நடந்த மூன்று நாட்களும் ஒரே ஒரு எண்ணம் எனக்கு மேலோங்கி நின்றது. உயரிய செந்தமிழிலேயே மணிக்கணக்கில் சுவையுடன் நாடகம் நடத்தலாம். எல்லாரும் நிச்சயம் ரஸிப்பார்கள்.

# தமிழ்ப் புத்தாண்டு

## உங்களுக்கு

## இன்ப மயமான
## வருஷமாக

திகழ எங்கள் நல் வாழ்த்துகள்

மேட்டூர் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

மேட்டூர் அணை, சேலம் ஜில்லா

## மேட்டூர் மல்கள் & லாங்கிளாத்கள்

தயாரிப்பவர்கள்








மானேஜிங் ஏஜண்டுகள்

**W. A. பீயர்ட்ஸெல் & கம்பெனி பிரைவேட் லிமிடெட், மதராஸ்-1.**

# நாராயண சந்நியாசி

**தக்ஷிண பினாகினி** நதிக் கரையில் ஒரு சந்நியாசி இருந்து வந்தார். அவர்பெயர் நாராயண சந்நியாசி. ஆசிரமத்தை விட்டு வெளியே செல்லும் போதெல்லாம் 'நாராயண' 'நாராயண' என்று சொல்லிக் கொண்டே நடப்பார். அதனால் இந்தப் பெயர் அவருக்கு வழங்கி வந்தது.

ஒரு வாலிப சிஷ்யன் எதுவும் பேசாமல் மௌனமாக அவருக்கு வேண்டிய சிச்ருஷை செய்து வந்தான். இந்தப் பையன் உள்ளூர்க்காரன். சுவாமியார் அந்த ஊர் அல்ல. எந்த ஊரிலிருந்து வந்தவர் என்பது யாருக்கும் தெரியாது. நான்கு ஐந்து பாஷைகள் பேசுவார். ஆங்கிலமும் பேசுவார். நியமமாக இருந்து வந்தார். அந்தப் பக்கத்துக் கிராமங்களில் உள்ளவர் அனைவருக்கும் அவரிடம் ரொம்பப் பிரீதி.

இப்படியிருக்கையில் நாற்பது வயது பிராமணன் ஒருவன் அவரிடம் வந்து சேர்ந்தான். "சுவாமி! எனக்கு உலகம் பிடிக்கவில்லை. எனக்கு வழி காட்ட வேண்டும். உங்களுடன் இருப்பேன். அனுமதிக்க வேண்டும்" என்றான்.

"அப்பனே! நான் ஒரு தனி சந்நியாசி. உனக்குச் சாப்பாடு போட என்றால் முடியுமா?" என்றார் சுவாமியார்.

"வேண்டாம்! அதுவெல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன். என்னைப் பக்கத்தில் இருக்க அனுமதித்தால் போதும். எனக்கு மன அமைதியுண்டாகும்" என்றான்.

அப்படியே சில நாட்கள் இருந்து வந்தான்.

இவன் பெயர் ரகுநாதன். போலீஸ் உத்தியோகத்திலிருந்தவன். மனைவியின் நடவடிக்கை பிடிக்காமல் சண்டை போட்டுக்கொண்டு வீட்டை விட்டு வெளியேறியவன். ரகுநாதன் சின்னப் பையனுடன் துணையாக சந்நியாசிக்கு சிச்ருஷை செய்து வந்தான். தினமும் சந்நியாசியிடம் கொஞ்சம் உபதேசமும் பெற்று வந்தான்.

ஒரு நாள் சுவாமியார் குடிசைக்குள் தியானத்திலிருந்தவர் தமக்குத் தாமே ஏதோ பேசிக் கொண்டிருந்தார். ரகுநாதன், ஆற்றிலிருந்து குடத்தில் தண்ணீர் எடுத்து வந்தவன், கதவுக்கு வெளியே நின்று உள்ளே போகாமல் காது கொடுத்துக் கேட்டுக் கொண்டிருந்தான்.



"தம்பீ! உனக்குப் பெருந் துரோகம் செய்தேன். நான் மகா பாபி—கொலையாளி. நீ என்னை மன்னிப்பாயா? எனக்கு நற்கதி தருவாயா?" என்று சுவாமியார் சொல்லிக் கொண்டிருந்ததைக் கேட்டான்.

"ஓகோ! சந்நியாசி ஏதோபெரிய பாபம் செய்திருக்கிறார். கொலையாகவே இருக்கலாம். இதை விசாரிக்க வேண்டும்" என்று தீர்மானித்துக் கொண்டான்.

சில நாட்கள் கழித்து ரகுநாதன் ஆசிரமத்தை விட்டு விட்டு ஊருக்குத் திரும்பினான். மனைவியிடம் சரண் புகுந்தான். அவளும் அவன் திரும்பி வந்ததைப் பற்றிச் சந்தோஷப் பட்டாள். புருஷனை முன்னைவிடக் கொஞ்சம் நன்றாகக் கவனிக்க ஆரம்பித்தாள்.

ரகுநாதனுக்கு நாராயண சந்நியாசியைப் பற்றித் துப்பு விசாரிக்கும் ஆசை பிடித்துக் கொண்டது. பல ஊர்கள் சென்று விசாரித்தான். தன்னுடைய போலீஸ் அனுபவத்தை உப

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

யோகித்துச் சுவாமியாரைப் பற்றிப் பல விஷயங்களைக் கண்டு பிடித்தான்.

இப்படி ஏன் அனாவசியமாக இந்தக் காரியத்தில் இறங்கினான் என்று கேட்காதீர்கள். அவனுடைய இயற்கை தருமம். அது இவனை ஆட்டி நடத்திற்று.



சுவாமியாரைப் பற்றி அவன் விசாரித்தறிந்த விஷயங்கள் எல்லாம் நல்ல விஷயங்களாகவே இருந்தன.

ஒரு ஊரில் அவர் சிலகாலம் வியாபாரம் செய்து கொண்டிருந்தார் என்று தெரிந்தது. அங்கே தமக்கு வர வேண்டிய பாக்கிகளில் ஏழைகளைத் தொந்தரவு செய்யாமல் பெரும் பாகம் தள்ளிக் கொடுத்து விட்டு, கடையை மூடிவிட்டார் என்று அவ்வூரார் சொன்னார்கள்.

மற்றொரு ஊரில் இன்னொரு விஷயம் தெரிய வந்தது. அங்கே வியாதியஸ்தர்களுக்கு மருந்துகள் கொடுத்து வந்தார். பிறகு அந்த ஊரில் சர்க்கார் ஒரு தரும ஆஸ்பத்திரி வைத்ததும் இவர் தன் வைத்தியத்தை நிறுத்தி விட்டு ஊரைவிட்டுப் போய்விட்டார் என்று தெரிந்தது.

இன்னொரு ஊரில் இவர் வீடு வீடாகச் சென்று சோறு பிச்சை யெடுத்துச் சேரியில் ஏழை மாணவர்களுக்கு மத்தியான ஆகாரம் பள்ளிக்கூடத்தில் கொடுத்து வந்தார் என்றும், அதற்குச் சேரியில் உள்ளவர்கள் ஆட்சேபித்ததன் பேரில், வேறு ஊருக்குப் போய்விட்டார் என்றும் தெரிந்தது.

இப்படிப் பல ஊர்களில் விசாரித்துப் பல விஷயங்கள் சந்நியாசியைப் பற்றித் தெரிந்து கொண்டான். ஆனால் எல்லாம் நல்ல விஷயங்களாகவே இருந்தன. நம்முடைய ரகுநாதனுக்குத் திருப்தி ஏற்பட வில்லை.

பல ஊர்கள் சென்று விசாரித்த பின் நம்முடைய சந்நியாசி சிறுவயதில் பள்ளிக்கூடத்தில் படித்த இடத்தை ரகுநாதன் கண்டு பிடித்தான். அங்கேயும் எல்லாம் நல்ல விஷயங்களாகவே சொன்னார்கள்.

இந்தச் சிக்கல் தீரவில்லையே என்று ரகுநாதன் மிகவும் குழப்பம் அடைந்தான். பிறகு சந்நியாசி ஒரு ஊரில் போலீஸ் உத்தியோகம் பார்த்து வந்ததாகத் தெரிந்தது. இது தெரிந்ததும் 'இனி என் காரியம் நிறைவேறுவது நிச்சயம்' என்று எண்ணினான். ஆனால் சில நாள் கழித்து ராஜினாமா செய்து விட்டார், அவர் பேரில் ஒரு குற்றமும் காணவில்லை என்று தெரிந்ததும் மறுபடியும் ரகுநாதன் ஏக்கத்தில் மூழ்கினான்.

ஒரு ஊரில், இவருக்கு அண்ணன் தம்பி யாருமில்லை, இவர் ஒருவரே அவர் பெற்றோர்களுக்கு மகன், என்பதை அறிந்தான். இதை யறிந்து திகைத்தான். தம்பியைக் கொன்றவர் என்றல்லவோ சந்தேகப்பட்டு வந்தான். தம்பியே இல்லை என்று சொன்னதைக் கேட்டதும் தான் கட்டிய மணல் வீடு விழுந்து போனதாகக் கருதினான்.

பிறகு, 'ஒருவேளை தம்பியைக் கொன்றுவிட்டு, அதன்பின் தம்பியே இல்லை என்று சொல்லிக் கொள்ளலாம் அல்லவா?' என்று எண்ணி




னன். முடிவில் சந்நியாசியையே கேட்டு விடுவது என்று தீர்மானித்தான் ரகுநாதன்.

அவர் கோபிப்பாரோ என்று முதலில் கொஞ்சம் பயந்தான். பிறகு கோபித்தால்தான் என்ன பார்க்கலாமே என்று சுவாமியார் குடிசைக்குப் போனான்.

• • •

"குருவே! நான் என் மனைவியுடன் சமாதானம் செய்து கொண்டேன்" என்றான்.

"அப்படியா? ரொம்ப சந்தோஷம். சுகமாக இருப்பாயாக!" என்றார் சந்நியாசி.

"தங்களை ஒன்று கேட்க வேண்டும். அடியேன்மேல் கோபிக்கலாகாது" என்றான் ரகுநாதன்.

"கோபம் ஏன், அப்பனே? அதை நான் விட்டு ரொம்ப காலம் ஆயிற்று" என்றார்.

"தாங்கள் கோபத்தை விட்டீர்கள். ஆனால் உங்களை ஏதோ வருத்துகிறதே! அது என்ன?" என்றான்.

"என்னை வருத்தும் கவலை ஒரே ஒரு கவலைதான். அது இந்த ஆன்மாவின் விடுதலை" என்றார் நாராயண சந்நியாசி.

ரகுநாதன் மெள்ளத் தைரியம் செய்து கொண்டு, அன்று, குடத்தில் தண்ணீர் எடுத்துக் கொண்டு கதவண்டை நின்றபோது நடந்ததைச் சொன்னான்.

"ஏதோ பெரும் பாபம் செய்து விட்டதாகப் பிரார்த்தனை செய்துகொண்டிருந்தீர்களே, அது எனக்கு ஏன் என்று விளங்கவில்லை. அடியேனுக்கு அதைச் சொல்லி என் குழப்பத்தை நீக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டு தண்டாகாரமாக விழுந்து நமஸ்கரித்தான்.

"அப்பனே! எது வேண்டுமானாலும் கேள். ஒருவேளை அது உனக்கும் பயன் படலாம்" என்றார்.

"சுவாமி தங்களுக்கு ஒரு தம்பி உண்டா?" என்றான்.

"தம்பியா? எனக்கு நீ தம்பியல்லவா? எனக்கு எத்தனையோ பேர் தம்பிகள்!" என்றார்.

"அதுவல்ல நான் கேட்பது. தங்களுடைய பெற்றோருக்குத் தாங்கள் ஒரே குமாரரா, அல்லது ஒரு தம்பி இருந்தது உண்டா?" என்று கேட்டான் ரகுநாதன்.

"நான் ஒரே பிள்ளை, தம்பி! என் பூர்வாசிரம விஷயங்களை ஏன் ஞாபகப்படுத்துகிறாய்?" என்றார் சந்நியாசி.

"தம்பியைக் கொன்றதாகத் தாங்கள் சொல்லி, ஏதோ தியானித்துப் பிரார்த்தனை செய்து கொண்



டிருந்தீர்களே அன்று? அது என்னை வாட்டிக்கொண்டிருக்கிறது. பல ஊர்களில் சென்று உங்களைப் பற்றி விசாரித்தேன். விஷயம் விளங்கவில்லை. நானும் என் ஆயுளில் பல பாபங்கள் செய்து விட்டேன். தாங்கள் எப்படி அமைதி அடைந்தீர்கள் என்பதைக் கேட்டுத் தெரிந்து கொண்டு நானும் பயனடையலாம் என்று கேட்கிறேன்'' என்று தைரியமாக முடிவில் கேட்டான்.

சந்நியாசி சிரித்தார். "தம்பி! திருப்பத்தூரில் விசாரித்தாயா?" என்றார்.

"இல்லை" என்றான் ரகுநாதன்.

"அந்த ஊரில் நான் ஒரு காலத்தில் ஒரு சர்க்கார் வேலையிலிருந்தேன். ஒரு நாயை வளர்த்து வந்தேன். மிக நல்ல நாய். நாய்கள் எல்லாமே நல்ல பிராணிகள். ஆனால் என்னைத் தெய்வமாக நினைத்து என்மேல் சுவாமி பக்தி வைத்திருந்த அந்த நாயை நான் எப்படி மறப்பேன். அதுவே என் தம்பி. எந்தத் தம்பியைப் படைத்து அன்பு பெற்றாலும் அந்த நாயின் அன்புக்குச் சமமாகாது. நானே அதற்குத் தகப்பன், தாய், அண்ணன், எஜமானன், ஆண்டவன் எல்லாமாகப் பாவித்து அந்த நாய் என்மேல் அன்பு செலுத்தி வந்தது!"

சந்நியாசியின் கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருகிற்று.

"ரகுநாதா! கேள், நான் செய்த பாபத்தை. வாலி—அதுதான் அந்த நாயின் பெயர்—எப்படியோ அது ஊரில் வேறு நாய்களுடன் கலந்து உண்ணி உபத்திரவம் சம்பாதித்துக் கொண்டு விட்டது. எவ்வளவோ செய்து பார்த்தேன். உண்ணிகளை நீக்க முடியவில்லை. லட்சக் கணக்காக உண்ணிகள் பெருகி விட்டன. நான் குடியிருந்த வீட்டின் சுவர்களில் எல்லாம், சந்து பொந்துகளில் உண்ணிகள் சேர்ந்து விட்டன. நாய்க்கோ மிக வேதனை. காதுகளிலும் கண்களிலும் கூடப் பற்றிக் கொண்டு அந்தப் பிராணியைச் சங்கடப் படுத்தின. நாய் படுத்து எழுந்த இடங்களில் எல்லாம் உண்ணிகள் உதிர்ந்து, வீடு வாசலெல்லாம் உண்ணி மயமாகப் போய் விட்டது.



"நாயை வேறு ஊரில் இறந்த வெளியில் கட்டி வைத்து இடம் மாற்றினால் இந்தத் தொந்தரவு தீரும் என்று யாரோ சொன்னார்கள். ஒரு நாள் என் கையில் முழங்கை உள்புறம் ஒரு மச்சம் காணப்பட்டது. அந்த மச்சம் முந்தி இருந்ததல்ல. அது உண்ணியோ என்று சந்தேகப்பட்டு ஊசி போட்டுக் குத்தி எடுத்தேன். மிலு மிலு என்று கால்களுடன் ஒரு உண்ணியாக வெளிப்பட்டது. உடனே, நாயை ஒரு குடியானவனிடம் கொடுத்து வேறு ஊருக்கு அனுப்பி விட்டேன். வீடெல்லாம் விஷ மருந்துகள் நிறையப் போட்டுச் சுத்தம் செய்வித்தேன். சில நாட்கள் கழித்து வீட்டில் உண்ணிகளின் உபத்திரவம் தீர்ந்தது.

* * *

"'ஏன் என் அப்பன் என்னை இங்கே அனுப்பி விட்டான்? எனக்கு இங்கே இருக்க மனம் வரவில்லையே! என்மேல் அப்பனுக்கு ஏன் கோபம்?

நான் ஒன்றும் பிழை செய்யவில்லையே. இந்தப் பாழும் உண்ணிகளை அவனால் போக்க முடியாதா? ஏன் என்னைத் துரத்தி விட்டான்?' இப்படி நாய் எண்ணி எண்ணிச் சோறு உண்ணுமல் வாடிற்று.

"பிறகு கட்டியிருந்த பலமான கயிற்றைக் கடித்துக் கடித்து அறுத்துக் கொண்டது. பதினைந்து மைல் தூரத்துக்கு அப்பாலிருந்த என்னை அடைவதற்கு வேகமாக ஓடிற்று. வழியில் பல கிராமங்கள். ஒவ்வொரு கிராமத்திலும் பல நாய்கள் சேர்ந்து கொண்டு குலைத்துத் துரத்தி என் வாலியைத் தாக்கிக் கடித்தன. சில கிராமங்களில் ஓடித் தப்பித்துக் கொண்டது. சில இடங்களில் பலத்த யுத்தம் நடந்தது. பல நாய்கள் சூழ்ந்து கொண்டு தாக்கும் போது, சோறு தின்காமல் வாடிக் களைத்துப் போன வாலி, தன்னந் தனியாக நின்று எப்படிச் சண்டை பிடித்துத் தப்ப முடியும்? காது, கால், முகம் எல்லாம் கடிபட்டு, உடலெல்லாம் ரத்தம் ஒழுக நான் இருந்த ஊருக்கு அடுத்த ஒரு ஊருக்கு வந்து சேர்ந்து, அங்கே விழுந்து மாண்டது. என்னிடம் வந்து சேரவில்லை. அது வரையில் பிராணன் நிற்கவில்லை.

"இப்படி என் அருமைத் தம்பி செத்தான். நான்தானே அவனைக் கொன்றேன். இந்தப் பாபம் எப்படித் தீரும், ரகுநாதா?" என்றார்.

"வாலி, மாண்டுபோன வாரத்தில் அமாவாசை வந்தது. முன்னோர்களுக்கு என்னும் தண்ணீரும் விட்டேன். வாலிக்கும் விட்டேன். அத்துடன் உலகத்தைத் துறந்து விட்டேன்" என்றார் சந்நியாசி.

# பனித்துளி

"இன்னும் இரண்டாயிரம் வருஷங்களில் உலக நாடுகளில் ஜன நெரிசல் அதிகமாகி இட நெருக்கடி காரணமாக எல்லாரும் நிற்கவேண்டி நேரிடும்."

—செய்தி

**இந்த யூகத்தை இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பே வெளியிட்டிருக்கலாம். இப்போதே நாம் பஸ் ஸ்டாண்டில் நின்று கொண்டுதானே இருக்கிறோம்?**

★

"வனிலா என்னும் எண்ணெய் கொடுக்கும் செடிகள் நீலகிரி மலையடிவாரத்தில் வளர்கின்றன. இந்தச் செடி நாலு வருஷங்களில் அழகாகப் புஷ்பிக்கிறது. இது ஆண்டவனின் சிருஷ்டி அற்புதங்களில் ஒன்று."

— செய்தி

**அவனில்லாமல் எதுவும் நடப்பதில்லை அன்றோ?**

★

"எதற்கெடுத்தாலும் இந்தக் காலத்தில் மகாநாடு கூட்டித் தீர்மானம் போடுகிறார்கள். இதை நான் விரும்பவில்லை. இந்தப் பழக்கம் நீங்கவேண்டும்."

— நேருஜி

**அதற்கென்ன? 'மகாநாடுகள் ஒழிப்பு மகாநாடு' என்று ஒன்றைக் கூட்டித் தீர்மானம் போட்டு விட்டால் போகிறது!**

"மகாத்மாஜியின் பழையகால கடிகாரம் ஒன்று அலகாபாத் பொருட்காட்சி சாலைக்கு வழங்கப்பட்டது. ஆனாலும் அது சரியான நேரத்தையே எப்போதும் காட்டுகிறது."

— செய்தி

**காந்தி கடிகாரம் சத்தியமே பேசும்.**

★

"சர்க்கார் பஸ் டிரைவர்கள், கண்டக்டர்கள் வேலைக்குப் போகும் நேரங்களில் அவர்களுக்கென்று பிரத்தியேகமாக பஸ் விடவேண்டும்."

—செய்தி



**"வேண்டாம்; அப்புறம் அவர்களும் வந்து பஸ் ஸ்டாண்டில் காக்க நேரிடும்!" என்கிறார் ஒரு பஸ் பிரயாணி.**

★

"காஷ்மீர் பற்றிப் பிரதமர் நேருஜி பேசியது பாகிஸ்தான் பிரதமரின் மண்டையைச் சூடாக்கிவிட்டது."

—செய்தி

**ஆனால், நேருஜி காஷ்மீரின் பெயரைச் சொன்னாலே நமக்கெல்லாம் உச்சி குளிர்ந்து விடுகிறது!**



# விருது பெற்ற கலைஞர்கள்

## பாலக்காடு ஸ்ரீ மணி ஐயர்

நந்தி தேவர் பயின்ற தாள வாத்தியக் கலையிலே நந்தியின் திருவருளைப் பூரணமாகப் பெற்றவர் என்று சொல்லக்கூடிய வகையில் இன்று மகோன்னதமான ஆற்றல் படைத்து விளங்கும் அதிசயக் கலைஞர் பாலக்காடு மணிஐயர் அவர்கள். மிகச் சிறு வயதிலிருந்தே இவருடைய மேதா விலாசத்தைக் கண்டு நாடு முழுதுமே அதிசயித்தது. சங்கீத வித்துவான்கள் எல்லாம் அப்படியே மெய்ம் மறந்தார்கள். விறுவிறுப்பும், கற்பனைச் செறிவும், அனுயாசமான பேச்சும் இவருடைய வாசிப்பின் தனிச் செல்வம். "இவருக்கு ஈடு இவரே" என்று சொல்லக் கூடிய ஒப்பற்ற கலைஞர். இவ்வாண்டில் ஜனாதிபதி விருது பெற்றார்.



## ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி

'சங்கீதக் கலையின் அரசி' என்று பிரதம மந்திரி நேருஜியால் மனமுவந்து பாராட்டப்பட்ட அற்புதக் கலைஞர். சாரீர சம்பத்தும், உன்னதமான வித்வத்தும், அபாரமான பக்தி பாவமும் ஒருங்கே இணைந்த கலைஞர். தமது கலை நாட்டின் சேவைக்குப் பயன்பட வேண்டும் என்ற உயர்ந்த கொள்கையுடையவர். கடந்த பன்னிரண்டு ஆண்டுகளில் இருபத்தைந்து லக்ஷம் ரூபாய்க்கு மேல் இவருடைய உதவிக் கச்சேரிகளின் மூலம் வசூலாகிப் பொதுப் பணிகளுக்குப் பயன்பட்டிருக்கிறது. 1954-ம் ஆண்டில் பாரத சர்க்கார் 'பத்மபூஷண்' என்ற சிறப்பை வழங்கிக் கௌரவித்தனர். இந்த ஆண்டில் ஜனாதிபதி விருது அளிக்கப்பட்டது.



# Royal Enfield



# ராயல் என்பீல்ட்

## சைக்கிள்கள்

யுத்த காலத்தில் **ராயல் என்பீல்ட்** சைக்கிள்கள் இறக்குமதி வெகுவாகத் தடைபட்டது. ஏனெனில் தொழிற்சாலையில் மோட்டார் – சைக்கிள் உற்பத்திக்கே அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. தற்போது இந்தியாவிலேயே **ராயல் என்பீல்ட்** மோட்டார் சைக்கிள் உற்பத்தி செய்யத் தொடங்கியதால், சீமையில் உள்ள தொழிற்சாலையில் சைக்கிள்களை அதிகமாக உற்பத்தி செய்ய வசதி ஏற்பட்டிருக்கிறது.

எனவே முன்போல் **ராயல் என்பீல்ட்** சைக்கிள்களை மிகுந்த அளவில் இறக்குமதி செய்கிறோம் என்ற நற்செய்தியை எமது வியாபாரிகளுக்கும், வாடிக்கைக்காரர்களுக்கும் இந்தப் புது வருஷ நன்னாளில் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

## ராயல் சைக்கிள் & மோட்டார் கம்பெனி

**13/14, பிராட்வே :: மதராஸ் - 1**

தபால் பெட்டி நெ. 219 போன் 3949 (2 லைன்ஸ்)

கிளை ஆபீஸ் :

**தி பயோனியர் சைக்கிள் ஹவுஸ்**

47/49, மேலக் கோபுர வீதி, மதுரை

போன் : 303. :: தபால் பெட்டி நெ. 22.

# கடல் கண்ட கனவு




முதல் பாகம் வலம்புரித் தீவு

# கடல் கண்ட கனவு

## முதல் அத்தியாயம்

## சங்கு முகம்

அந்த ஊர்வலம் கோலாகலமான வாத்திய முழக்கங்களோடு வருகிறது. திருச்சங்கம் மங்களகரமாக ஒலிக்கிறது. எக்காளம் கம்பீரமாக நாதம் கொடுக்கிறது. ஜய பேரிகைகள் முழங்குகின்றன. ஆயிரக் கணக்கான மக்கள் பல்லக்கைச் சூழ்ந்து கொண்டு ஆரவாரிக்கின்றனர். என்ன ஆச்சரியம்! அசைந்து அசைந்து செல்லும் அந்தப் பல்லக்கிலே பன்னிரண்டு வயதுச் சிறுவன் ஒருவன் வீர கம்பீரத்தோடு அமர்ந்திருக்கிறான்!

இதோ! திருமண்மங்கலம் என்ற கிராமத்திலிருந்து அந்த ஊர்வலம் காஞ்சிமா நகரின் எல்லையை அடைகிறது. மகா சாமந்தரும், நகரத்தாரும், பிரகிருதிகளும், முத்தரையரும் வைகுந்தப் பெருமாள் கோவிலின் திருப்பிரசாதத்தோடு எதிர் வந்து வரவேற்கிறார்கள். இதோ! பட்டத்து யானை பிளிறுகிறது. அதனுடைய முகபடாம் செங்கதிரிலே மின்னி ஒளி வீசுகிறது. அதன் மேல் கம்பீரமாக அலங்காரம் செய்யப்பட்டிருக்கிறது அம்பாரி! பல்லக்கில் வந்து இறங்கிய அந்தப் பாலகனை, பால் வடியும் முகத்தோடு தோற்றம் அளிக்கும் அந்தப் பன்னிரண்டு வயதுச் சிறுவனை,–தமிழ் நாடு முழுதும் கீர்த்தி பரப்பிக் கடலுக்கு அப்பாலும் தனது கனவுகளை நிலைநாட்டப் போகும் அந்த ராஜ கம்பீரனை, இதோ, பல்லக்கிலிருந்து வரவேற்று யானையின் மேல் அம்பாரியிலே அமர்த்துகிறார்கள். வெற்றிச் சின்னம் ஒலிக்கிறது. "வாழ்க! வாழ்க!" என்ற வாழ்த்தொலி வானத்தை முட்டுகிறது. "சமுத்திர கோஷம்" என்று பெயர் சூட்டப்பட்ட முரசம் "பட பட" என்று இந்த பூமி முழுதும் கேட்கும்படியாகக் கொட்டுகிறது. அந்த மகனைப் பெற்ற மதிப்புக்கு உரிய தந்தையும், அவன் அருகே நிற்கும் தரணிகொண்ட போசர் என்ற பெரியவரும் உள்ளத்திலே பூரிப்புக் கொண்டு அப்படியே முகம் மலர்கிறார்கள்.



வாத்தியங்கள் கோஷிக்கின்றன. விருதாவளிகள் முழங்குகின்றன. யானைகளும், குதிரைகளும், சிறு சிறு ரதங்களுமாக முன் செல்கின்றன. வீர கவசம் அணிந்த மகா வீரர்கள் கட்டியம் கூறுகிறார்கள். அமைச்சர்

களும், பிரதானிகளும் முன் நடக்கிறார்கள். ராஜ்யாபிஷேகம் செய்வதற்காக, மக்களின் பிரதிநிதியாக, நாட்டு மக்களே தேர்ந்தெடுத்த காவலனாக, அந்தச் சிறுவன் யானைமேல் அம்பாரியிலே செல்லுகிறான்!

பன்னிரண்டு வயதுச் சிறுவன். நேற்றுவரை அவனுடைய தந்தை இதை எதிர்பார்த்தாரா? "பேரரசன் இறந்தான். பட்டத்துக்குச் சந்ததியில்லாமல் இறந்தான்!" என்ற நிலை ஏற்படும் என்றும், அந்தப் பதவி தம்முடைய மகனுக்கு, அதிலும் நான்கு புத்திரர்களில் கடைசிப் புத்திரனாகிய அந்தச் சிறுவனுக்குக் கிடைக்கும் என்றும், அந்த மகத்தான அரச பதவி தம்முடைய வீட்டு வாசலிலேயே வந்து அமைந்து நிற்கும் என்றும் அவர் எதிர்பார்த்தாரா? இல்லவே இல்லை!

தமிழ் நாட்டின் சரித்திரத்தில் அது ஓர் அதிசயமான நிகழ்ச்சி. அந்த நிகழ்ச்சி நடப்பதற்கு முன்பு நமது செந்தமிழ்நாடு எப்படியிருந்தது? இப்படி ஒரு சிறுவனை அரசனாகத் தேர்ந்தெடுப்பதற்கு முன்பு அமைச்சர்களும், பிரதானிகளும் எத்தனையோ பாடுபட்டார்கள்! சளுக்கர்களுடைய படையெடுப்பு ஒரு புறம். பாண்டிய அரசர்களின் பகை ஒருபுறம். கொடும்பாளூர் வேளிர்கள் கொடுத்து வந்த இடையூறுகள் ஒரு புறம். சேரர்களின் சூழ்ச்சி ஒரு புறம். இத்தனை குழப்பங்களுக்கும் மத்தியில், பரமேசுவர வர்மன் இறந்ததும், பட்டத்துக்குச் சரியான அரசன் இல்லையே என்று எத்தனை தவிப்புத் தவித்தனர்! தாயாதிக் குடும்பத்திலுள்ளவர்களை யெல்லாம் ஒவ்வொருவராகச் சென்று "நீங்கள் மகுடம் தரிக்கிறீர்களா?" "நீங்கள் செங்கோல் பிடிக்கிறீர்களா?" "நீங்கள் அரச பீடத்தில் ஏறுகிறீர்களா?" என்று எத்தனையோ ஆவலோடு கேட்டும், யாரும் அரசபதவிக்குவர ஒப்புக்கொள்ளவில்லையே! கடைசியில் இரணிய வர்மராவது ஒப்புக்கொண்டாரா? இல்லை. தம்முடைய புத்திரர்களைப் போய்க் கேளுங்கள் என்றுதான் சொல்லிவிட்டார் அவர்.

ஆமாம்: இரணிய வர்மரும், தாம் அரசாளுவதற்குச் சம்மதிக்க முடியாது என்றுதான் மறுத்துச் சொல்லிவிட்டார்! அதன்பேரில், சேனாபதியும், மந்திர நாயகரும் எத்தனையோ வேதனைப் பட்டார்கள்!

இன்றைக்குச் சற்றேறக் குறைய ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முன் காஞ்சி நகரில் பல்லவ பரமேசுவர வர்மன் இறந்ததும், இந்தச் சிக்கல் ஏற்பட்டது. நம்முடைய செந்தமிழ் நாட்டிலே!



பரமேசுவர வர்மனுக்குப் புத்திரர்கள் இல்லை. பட்டத்துக்குச் சந்ததியில்லாமலேயே அவன் இந்த உலகிலிருந்து மறைந்தான்.

சிம்ம விஷ்ணுவின் பரம்பரையிலே சித்திரமாயன் என்று ஒருவன் இருந்தான். அடுத்தபடியாகப் பட்டத்துக்கு அவன்தான் தாயாதியுரிமை கொண்டாடக் கூடியவன். ஆனால் அவன் வெறுங் கோழை. தமிழ் நாடு அன்று இருந்த நிலையிலே அரசப் பொறுப்பை நிர்வகிக்கக் கூடிய ஆற்றல் அவனுக்கு இல்லை என்று அமைச்சர்கள் அனைவருமே கருதினார்கள். அதனால்தான் இரண்டாம் தாயாதியான இரணிய வர்மரைப் போய்க் கேட்டார்கள். இரணிய வர்மர் புத்திசாலி. அன்றையச் சூழ்நிலையில் தமிழ் நாட்டின் அரச பீடம் என்பது மலர் மெத்தையல்ல, முள் - படுக்கை என்பது அவருக்குத் தெரியும். "எனக்கு வயதாகிவிட்டதே!" என்று சாக்குச் சொன்னார்.

"எப்படியும் அரச குடும்பத்துத் தாயாதிகளில் ஒருவரையே தேர்ந்தெடுத்து வருவதாகப் பிரதானிகளிடம் சொல்லி விட்டு வந்திருக்கிறேன். இனிக் காஞ்சிபுரத்துக்கு ஏமாற்றத்தோடு திரும்பிச் செல்ல மாட்டேன்!" என்றார் அமைச்சர்.

"உங்களுடைய மூத்த புதல்வரை அனுப்புங்களேன், அரசானே! உங்களுக்குத்தானே வயதாகிறது என்கிறீர்கள்!" என்றார் சேனைத் தலைவர்.

இரணிய வர்மரால் பதில் பேச முடியவில்லை. "சரி" என்றார்.

"சரி; நான்கு புத்திரர்களில் ஒருவனைச் செலவு எழுதிவிட வேண்டியதுதான்!" என்று மனத்துக்குள்ளே நினைத்துக் கொண்டுதான் இப்படிப் பதில் சொன்னார் இரணிய வர்மர்.

காரணம் அன்றிருந்த நாட்டின் நிலை அப்படி!

மூத்த புதல்வனைக் கேட்டார்கள். 'முடியவே முடியாது' என்று சொல்லி விட்டான். இரண்டாம் புத்திரனைக் கேட்டார்கள். "அரச பதவியா! எனக்கா!" என்று ஓடி ஒளிந்து கொண்டான். மூன்றாம் புத்திரனின் கதையும் அப்படியேதான்!



அமைச்சரும், சேனாபதியும் காலைத் தேய்த்தார்கள்.

"உங்களுடைய நான்காவது புத்திரன் எங்கே?" என்று ஆவலோடு கேட்டார் அமைச்சர்.

"இளங் கன்று பயம் அறியாது. அவனைப் போய்க் கேளுங்கள், ஒப்புக் கொள்ளுவான்!" என்றார் இரணிய வர்மர், சிரித்துக் கொண்டே.

"அவர் எங்கேயிருக்கிறார், உங்களுடைய நான்காவது புதல்வர்?" என்று ஆர்வத்தோடு தந்தையைக் கேட்டார் சேனாபதி.

"மாந்தோப்பில் போய்ப்பாருங்கள். விளையாடிக் கொண்டிருப்பான்!" என்றார் இரணிய வர்மர்.

"மாந்தோப்பிலா?" என்று ஆச்சரியத்தோடு அமைச்சர் கேட்டார்.

"ஆமாம். பன்னிரண்டு வயதுப் பையன் வேறு என்ன செய்துகொண்டிருப்பான், இந்த மாலை நேரத்தில்? மாந்தோப்பிலேதான் விளையாடிக்கொண்டிருப்பான்!" என்றார் தந்தை.

பன்னிரண்டு வயதுப் பையன் என்றதும் அமைச்சருக்கு ஒன்றும் ஓடவில்லை. ஆனால் சேனாபதி உதயசந்திரனோ என்றால் சற்றும் தயங்கக் காணோம்!

"அமைச்சரே! நண்பர்களே! புறப்படுங்கள் மாந்தோப்புக்கு!" என்றார் உதயசந்திரன்.

சோலையும், நந்தவனமுமாக இருந்த அந்த அழகிய திருமண்மங்கலம் கிராமத்திலே வயல் வெளிகளைத் தாண்டிக் கொஞ்ச தூரம் நடந்தால் ஒரு பெரிய மாந்தோப்பு இருந்தது. அந்த மாந்தோப்புக்குள்ளே ஒரு விசித்திரமான விளையாட்டு நடந்து கொண்டிருந்தது.

மாந்தோப்பின் நடுவிலே ராஜ மாமரம் என்று சொல்லக்கூடிய ஒரு பெரிய, மிகப் பெரிய மாமரம், ஏகசக்கிராதிபதியாகக் கம்பீரமாக எழுந்து கிளை வீசி நின்றது. அதன் வேர்கள் எல்லாம் பூமிக்கு மேலே பெரிய பெரிய மலைப் பாம்புகளைப் போல வளைந்து நெளிந்துகொண்டு ஓடின. அந்த வேர்களில் எல்லாம் அதிக உயரமாக இருந்த ஒரு பெரிய வேரின் வளைவில், மத்திய பாகத்திலே ஏறி அமர்ந்திருந்தான் ஒரு சிறு பையன்.

ஏதோ பஞ்சணை மெத்தை பரப்பிய சிம்மாசனத்திலே ஏறி அமர்ந்திருப்பது போலப் பாவனை! கையில் ஒரு மாங்கொப்பு. நீண்ட கிளை, அதன் நுனியிலே மாவிலைகள்! அதைச் செங்கோலாகப் பிடித்துக் கம்பீரமாக அந்த மாமரத்து வேராசனத்திலே வீற்றிருக்கிறான். பன்னிரண்டு வயதுச் சிறுவன். அவனுக்கு இரு புறமும் இரண்டு வரிசையில் வலது பக்கம் ஐந்து சிறுவர்கள், இடது பக்கம் ஐந்து சிறுவர்கள் தரையில் அமர்ந்திருக்கிறார்கள். ராஜா-மந்திரி விளையாட்டு நடக்கிறது!

"மந்திரி!" என்று சிங்கத்தைப் போன்ற கர்ஜனையோடு அழைக்கிறான் பாலராஜன்!

"அரசே!" என்று வாய் புதைத்து எழுந்து நிற்கிறான், இதுவரை வலப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருந்த ஒரு சிறுவன்.

"மந்திரி! நம்முடைய இந்த வளமான நாட்டிலே ஆலயங்கள் தோறும் ஆறு கால பூஜை ஒழுங்காய் நடக்கிறதா?" என்று



கேட்டுக் கொண்டே வீரமான குரலில் கீழ்க்கண்டவாறு பாடுகிறான் சிறுவன் :—

"ஆலயந் தோறும்
அறுகால பூஜை
சீலமாய் நடக்கிறதா
ஆ ஆ ஆ ஆ!"

இந்தப் பாட்டு "ஆஆ" என்ற சங்கதியோடு முடிகிற வரை, வாய் புதைத்து, பொறுமையாகக் கேட்டுக்கொண்டே நிற்கிறான் அந்தப் பையன். பாட்டு முடிந்ததும் கீழ்க்கண்டவாறு பதில் சொல்கிறான். முதலில் வசனத்தில், பிறகு பாட்டிலே.

"ஆலயம் தோறும்
அறுகால பூஜை
சீலமாய் நடக்கிறது
ஊ ஊ ஊ ஊ!"

அந்த "ஊகாரம்" முடிந்ததும், மறுபடியும் அரசன் கேள்வி கேட்கிறான்.

"சரி, முதல் மந்திரியாரே! நீர் உட்காரலாம். இனி நம்முடைய இரண்டாவது அமைச்சரே! நீர் எழுந்து நில்லும்."

இரண்டாவது சிறுவன், தரையில் உட்கார்ந்திருந்தவன், இப்பொழுது எழுந்து நிற்கிறான். இவனுக்குப் பாட்டுப் பாட வராது போலும்! அதனால் அரசர் தமது கேள்வியை வசனத்தில் மட்டுமே கேட்டு நிறுத்திக் கொள்கிறார். என்ன கேட்கிறார்?

"சொல்லும், இரண்டாவது அமைச்சரே! நம்முடைய நாட்டிலே உள்ள சத்திரங்களில் எல்லாம் உணவும் உபசரிப்பும் தினந்தோறும் சரிவர நடக்கின்றனவா?"

எழுந்து நின்று வாய் பொத்திக் கொண்டிருந்த பையன், பளீர் என்று இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லுகிறான்.

"மகா ராஜாதி ராஜனே! நம்முடைய நாட்டில் உள்ள சத்திரங்கள் யாவும் தாளிட்டு நன்றாகப் பூட்டப்பட்டுக் கிடக்கின்றன. அவற்றின் கதவுகளைத் திறந்து எத்தனையோ ஆண்டுகள் இருக்கும்!"

அமைச்சர் இப்படிப் பதில் சொன்னதும் அரசருக்கு மீசை, அதாவது மீசைக்குப் பதிலாக மேல் உதடு, மீசையின் பாவனையிலே துடிக்கிறது! கையிலே இருந்த 'செங்கோல்' சுழல்கிறது. மாங் கொப்பிலே இருந்த நுனி இலைகள் சிதறுகின்றன!

"அமைச்சரே! என்ன சொன்னீர்? இது உண்மைதானா?"

"ஆமாம், மகாராஜா! நம்முடைய சத்திரங்கள் அனைத்தும் பூட்டிக் கிடக்கின்றன. நம்

முடைய நாட்டில் வறுமை என்பதே இல்லாத காரணத்தால், யாரும் சத்திரத்துக்குச் சாப்பிட வருவதே இல்லை. அவற்றின் கதவுகள் மூடியே இருக்கின்றன!''

''ஹஹ் ஹஹ் ஹஹஹா'' என்று ராஜா சிரிக்கிறார்.

''அமைச்சரே! மெச்சினோம் உம்முடைய சாதுரியத்தை!'' என்று அரசன் சொல்லி முடிப்பதற்குள், மாந்தோப்பிலே சலசலப்பு உண்டாகிறது.

''என்ன இது! மந்திரியாரே! நம்முடைய நாட்டிலும் பகைவர்களா?'' என்று அரசன் கேட்டுக் கொண்டே சப்தம் வந்த திசையை நோக்குகிறான்.

''பகைவர்கள் இல்லை, அரசே! நம்முடைய குடிமக்கள் தங்கள் சமு

சொல்லுங்கள். இதோ புறப்படுகிறோம் வேட்டைக்கு — நம்முடைய பரிவாரங்களோடு!''

இப்படி ஒரே மூச்சிலே பொரிந்து தள்ளினான், அந்தப் பன்னிரண்டு வயதுப் பையன். அமைச்சரும், சேனாபதி உதயசந்திரனும் சிறுவனை நோக்கி நடந்தார்கள். மற்றப் பிரதானிகள் நின்று ரஸித்தார்கள்.

''அன்புக்கு உரிய என் குடிமக்களே! ஏன் பேசத் தயங்குகிறீர்கள்? உங்களுடைய அரசனை நாடி நீங்கள் வந்த காரணம் என்ன? என்னை எங்கேனும் அழைத்துப் போக வந்தீர்களா?''

உதய சந்திரனுக்குக் கண் கலங்கி விட்டது. அவன் சிரிக்கவில்லை. உணர்ச்சி வசம் ஆனான்.



கத்தை நாடி வருகிறார்கள் போலிருக்கிறது!'' என்கிறார் முதல் அமைச்சர்.

உள்ளே நுழைந்த உதய சந்திரனும் மந்திரநாயகமும், அவர்களோடு வந்த பிரதானிகளும், இந்தக் காட்சியைப் பார்த்து அனுபவித்துக் கொண்டே, அந்தப் பெரிய மாமரத்தை நோக்கி நடந்து வருகிறார்கள்.

''குடி மக்களே! ஏன் தயங்குகிறீர்கள்? வாருங்கள். தைரியமாக வாருங்கள். உங்களைக் காப்பதற்காகத் தானே நாம் இந்தச் சிம்மாசனத்தில் வீற்றிருக்கிறோம். தயக்கமில்லாமல் வாருங்கள்! உங்களுடைய விளை நிலங்களிலே வன விலங்குகள் வந்து பயிரை அழிக்கின்றனவா?

''ஆம் அரசே! உங்களை அழைத்துப் போகத்தான் வந்தோம்!''

''எம்மை அழைத்துப் போகத் தானே! அதற்கு ஏன் இத்தனை தயக்கம் குடிமக்களே! உங்கள் காவலனை அழைக்கக் கூட நீங்கள் கூசலாமா? தைரியமாகச் சொல்லுங்கள். என்னை இப்பொழுது எங்கே அழைக்கிறீர்கள்?''

''மகாராஜனே! ராஜாதிராஜனே! உங்களை உங்கள் ராஜ்யத்துக்கு அழைத்துப் போகவே வந்தோம். எழுந்தருள வேண்டும்!'' என்றான் உதய சந்திரன்.

''என்ன இது! நீங்கள் சொல்வது விசித்திரமாக இருக்கிறதே. நம்

முடைய ராஜ்யத்தில்தானே நாம் இருக்கிறோம். இந்த மாந்தோப்பு முழுதுமே நம்முடைய ராஜ்யந்தானே? இதிலும் சந்தேகமா?'' என்றான் சிறுவன் அலட்சியமாக.

"இல்லை, அரசே! இந்த மாந்தோப்பு தங்களுடைய ராஜ்யந்தான். ஆனால் நாங்கள் சொல்வது இந்த மாந்தோப்பையும் விடப் பெரிய......''

"ஓ! அந்தக் காஞ்சிபுரத்துப் புளியந்தோப்பைச் சொல்லுகிறீர்களா? வேண்டாம், அது புளிக்கும். இது



மாந்தோப்பு. மாங்கனிகள் நிறைந்தது. இது இனிக்கும் குடிமக்களே!''

உதய சந்திரனுக்கும் அமைச்சருக்கும் இந்தச் சிறுவனுடைய இயல்பான பேச்சிலே ஏதேதோ விசேஷமான அர்த்தங்கள் தொனித்தன! உதயசந்திரனுக்கு உணர்ச்சி மேலிட்டினால் குரல் கம்மிற்று. சொன்னான்:

"அரசே! உங்களைத் தேடி எங்கெல்லாமோ அலைந்து விட்டோம். இதற்கு மேலும் எங்களை அலைய வைக்காதீர்கள். புறப்படுங்கள். உங்களுடைய வரவுக்காகக் குடி மக்கள் அனைவரும் காத்திருக்கிறார்கள். உங்களுடைய விஜயத்துக்காகச் சிம்மாசனம் காத்திருக்கிறது. உங்களை அரசராக்கிப் பார்த்து மகிழ மக்கள் எல்லாரும் காத்து நிற்கிறார்கள். புறப்படுங்கள்!''

"என்ன! என்னை அரசனுக்கவா? இது என்ன வேடிக்கை குடிமக்களே! நான் இப்பொழுதே உங்கள் அரசன் தானே! இனிமேல் என்ன என்னை ஆக்குவது?''

"உண்மை; எந்த விநாடியில் பரமேசுவர வர்மன் மறைந்தாரோ, அந்த விநாடியிலிருந்தே நீங்கள் தான் எங்கள் அரசர். அதைத் தெரிந்து கொள்ளாமல் தான் நாங்கள் எங்கெங்கோ அலைந்திருக்கிறோம். மகாராஜனே! கடந்த பன்னிரண்டு வாரங்களாக நீங்கள் தான் எங்கள் அரசர்! சந்தேகம் இல்லை. இப்பொழுது கண்டு கொண்டு விட்டேன். பூரணமாக உணர்கிறேன்!''

இப்படிச் சொல்லும்போது, பரவசத்தினால் உதய சந்திரனுடைய பரிவான விழிகளிலே கண்ணீர் மல்கியது.

"கடந்த பன்னிரண்டு வாரங்களாக என்று சொல்கிறீர்கள்! நம்முடைய அமைச்சர் திலகங்களே! என்ன பேசாமல் இருக்கிறீர்கள்? நீங்கள் சொல்லுங்கள். நான் எத்தனை காலமாக உங்கள் அரசன் என்பது இவர்களுக்குத் தெரியாது போலும்! குடிமக்களே! பன்னிரண்டு வாரங்களாக நான் உங்கள் அரசன் என்று தவருகச் சொல்கிறீர்கள். நான் பன்னிரண்டு வருஷங்களாகவே உங்களுடைய அரசன்! என்ன மந்திரிப் பிரதானிகளே!'' என்று சொல்லி ஒரு கர்ஜனை செய்தான் அந்தப் பன்னிரண்டு வயதுச் சிறுவன். உடனே மற்றச் சிறுவர்கள் எல்லாம் இருந்த இடத்தில் இருந்து எழுந்து, "ஆமாம்! பன்னிரண்டு வருஷங்களாகவே இவர் எங்கள் அரசர். இவர் பிறவியிலேயே எங்கள் ராஜா! இவர் வாழ்க! வாழ்க, வாழ்க!!'' என்று ஆரவாரித்தார்கள்.

இதற்குள் பையனைத் தேடிப் போனவர்களின் விஷயம் ஒன்றும் தெரியவில்லையே என்று, கவலை மேலிட்டவராய் இரணியவர்மர் அந்த மாந்தோப்பைத் தேடிக் கொண்டு அங்கே வந்து விட்டார். தோப்புக்குள்ளே வந்து பார்த்தால் அவருக்கு வியப்புத் தாங்க முடியவில்லை. தகப்பனைக் கண்டதும் பையன் சிம்மாசனத்தை விட்டு எழுந்து விட்டான். வெட்கம் மேலிட்டவனாக, அப்படியே ஓடிப் போய்த் தந்தையைத் தாவிப் பிடித்துக் கொண்டு நின்றான். மற்றப்

பையன்கள் எல்லாரும் கூடையிலிருந்து கொட்டிய மாவடுக்களைப் போலத் துள்ளிச் சிதறி ஓடிவிட்டார்கள்!

"உதய சந்திரரே! மந்திரியாரே! எங்கள் பையனை மன்னிக்க வேண்டும்! அவனுக்கு எப்பொழுது பார்த்தாலும் ராஜா மந்திரி விளையாட்டு என்றால் ஒரே கொண்டாட்டம். நான் என்ன சொன்னாலும், எத்தனை கண்டித்தாலும் கேட்பதில்லை. இந்த விளையாட்டு விளையாடுவதற்காகச் சகாக்களோடு தினந்தோறும் இந்த மாந்தோப்புக்கு வந்து விடுகிறான்! இத்தனை பிரமுகர்கள் வந்திருக்கிறீர்கள் என்று அவனுக்குத் தெரிகிறதா! உங்களை எழுந்து வரவேற்க வேண்டும் என்று கூடத் தோன்றவில்லை. அவனை மன்னித்து விடுங்கள். அவனுக்கு இது ஒரு விளையாட்டு. நான் அவனை என்ன செய்யச் சொல்கிறீர்கள்?" என்று பரிதாபமாகக் கேட்டார் இரணியவர்மர்.

"வேறு ஒன்றும் உங்களைச் செய்யச் சொல்லவில்லை. எங்களோடு இவரை அனுப்பி விடுங்கள். இந்த விளையாட்டுக்காக அவரை மன்னிக்கும்படி என்னிடம் சொன்னீர்கள். யார் யாரை மன்னிப்பது? உண்மையில் இந்த விளையாட்டுக்காக அவரை நாங்கள் அஞ்சலி செய்ய வேண்டும்! யோசித்துப் பார்த்தால் அவர் செய்தது விளையாட்டே இல்லை. அது உண்மை. கடந்த பன்னிரண்டு வாரங்களாக, அதாவது பரமேசுவர வர்மர் மரணம் அடைந்த நாளிலிருந்து, இவர்தான் எங்கள் அரசர் என்று சற்று நேரத்துக்கு முன்பு சொன்னேன். அது தவறு என்று உங்கள் பிள்ளையே என்னைத் திருத்தினார். ஆமாம். கடந்த பன்னிரண்டு வருஷங்களாகவே, அவர் பிறந்த அந்த வேளையிலிருந்தே, அவர்தான் நம்முடைய அரசர்! நாம்தான் இது வரை குருடாக இருந்து விட்டோம். அரசரைப் பார்க்க வெள்ளெழுத்து வந்து விட்டது இதுவரை நமக்கு!"

"உதய சந்திரரே! என்ன சொல்கிறீர்கள்? நாலாவது பையனைப் போய்க் கேளுங்கள் என்று விளையாட்டாகத்தான் நான் சொன்னேன். நீங்களானால் அதை—"

"இல்லை! விளையாட்டே இல்லை. உண்மையான வார்த்தைதான் நீங்கள் சொன்னதும் நான் சொல்வதும். அந்த உண்மையை நாம் இப்பொழுதுதான் தெரிந்து கொண்டோம்!"

இரணிய வர்மருக்குக் கண் கலங்கியது. அங்கம் பதறியது.

"அப்பா! என்ன இது? ஏன் உங்கள் கண் கலங்குகிறது?" என்று கேட்டான் சிறுவன்.

"கண்ணே! இவர்கள் எல்லாரும் உன்னை அரசாள அழைக்கிறார்கள். உன்னுடைய வயதுக்கும், உனது சக்திக்கும் பொருந்தாத பெரிய பொறுப்பை உன் மேல் சுமத்த எண்ணுகிறார்கள். அதன் கஷ்டம் எனக்கல்லவா தெரியும்?" என்றார் இரணிய வர்மர். கண்ணிலிருந்து கண்ணீர்த் துளி சிதறியது.

"எதன் கஷ்டம் உங்களுக்குத் தெரியும் என்கிறீர்கள் அப்பா?"

"அரச பதவியின் கஷ்டத்தைச் சொல்கிறேன், கண்மணி!"



இப்படிச் சொல்லும்போது இரணிய வர்மருக்கு மேலும் தொண்டை அடைத்தது.

"அரச பதவியின் கஷ்டமா! என்ன அப்பா இப்படிச் சொல்கிறீர்கள்? ஒய்யாரமாகச் சிம்மாசனத்திலே ஏறி உட்கார்ந்து மந்திரிகளைப் பார்த்து ஆறு கால பூஜையும், சத்திரச் சாப்பாடும் ஒழுங்காக நடக்கின்றனவா என்று கேட்பதில் கஷ்டம் என்ன வந்தது கஷ்டம்! போங்கள் அப்பா!

உங்களுக்கு ஒன்றுமே தெரியாது. என்றாவது ஒரு நாள் நீங்கள் இந்த மாந்தோப்பிலே வந்து, இந்த வேரின் மேல் அமர்ந்து பார்த்திருந்தால் அல்லவா உங்களுக்குத் தெரியும்!"

இப்படி மகன் பேசியதும், தந்தைக்கு உள்ளம் எல்லாம் அன்



பினால் பூரித்துப் போய் விட்டது. மகனுடைய பசலைத் தன்மையை நோக்கிப் பரிவோடு புன்முறுவல் செய்தார். அப்போது பிரதானிகளின் கூட்டத்திலே நின்ற தரணிகொண்ட போசர் என்ற பெரியார் பேச ஆரம்பித்தார்.

"இரணிய வர்மரே! உம்முடைய நான்காவது புத்திரனைச் சாமானியமாக நினையாதீர்! அவனுடைய முகக் குறியும், தோள்களின் அங்க அடையாளமும் ராஜ லக்ஷணம் பொருந்தியவை. அவனுடைய கண்களின் ஒளியும், அவனுடைய நாவின் வன்மையும் அகில உலகத்தையும் ஆளக் கூடியவை. அவனுடைய உள்ளங் கையைப் பார்த்தீரானால் நிச்சயம் சக்கர ரேகை கிடப்பதைக் காண்பீர்! அவன் உமது குல தெய்வமாகிய காஞ்சித் திருமாலின் பூரண அருளும் நிரம்பியவன். தயங்காமல் அனுப்பும்!"

இப்படிச் சொன்னார் தரணி கொண்ட போசர் என்ற பெரியார். அவருடைய குரலில் நிச்சயமும்,




நிதானமும், அசைக்க முடியாத நம்பிக்கையும் தொனித்தன. அவருடைய வார்த்தைகளை, அத்தனை பெரியவருடைய சொற்களை, யாராலும் மறுத்துப் பேச முடியவில்லை.

பல்லக்கு ஆயத்தம் ஆகிற்று. கட்டியம் முழங்கியது. திருச்சின்னம் ஒலித்தது. எக்காளம் எழுந்து நின்று பேசியது. ஜய பேரிகை முழங்கிற்று!

"மகனை ஆசிர்வதித்துப் பல்லக்கிலே ஏற்றி வையுங்கள்!" என்றார் உதய சந்திரன்.

அளவு கடந்த பாசத்தோடு மகனை ஆசிர்வதிக்கும் போதே கலங்கிய கண்களுடன் இரணிய

வர்மர் சொல்லுவார்: "மகனே! நீ கனவு காண்பது போல அரச பதவி என்பது இந்த மாந்தோப்பு விளையாட்டைப் போலவே உல்லாசம் நிரம்பியதாக இருக்குமாக!"

திருச் சங்கம் மூன்று முறை ஒலித்தது. பல்லக்கு அந்தக் கிராமத்தை விட்டு நகர்ந்தது.

**கா**ஞ்சி மாநகரின் எல்லையிலே பட்டத்து யானையும், பல்லவ சேனாபதிகளும், ரதகஜ துரக பதாதிப் படைகளும், தங்கள் அரசரை எதிர்கொண்டு அழைத்தார்கள். யானைமேல் அம்பாரி ஒய்யாரமாக நடந்தது. காஞ்சி மாநகரின் மாபெரும் அரமனையை நோக்கி!

பன்னிரண்டு வயதுச் சிறுவன்! ஆனைமேல் அம்பாரி என்றால் அதுவும்



அவனுக்கு ஒரு விளையாட்டுத்தான். ஆனால் அதன் கஷ்டம் உண்மையாகவே தந்தை இரணிய வர்மருக்கு அல்லவா தெரியும்!

சிறுவன் எதிர்பார்த்தது போல அவனுடைய அரசாட்சி ஆறு கால பூஜையைப் பற்றியும், மடப்பள்ளியிலே நடக்கும் சாப்பாட்டைப் பற்றியும் கேட்கிற சங்கீத விசாரணையோடு நின்றதா? அந்தச் சிறுவனுடைய பிற்கால அரசியல் ஒரு மாந்தோப்பு விளையாட்டாகவேதான் இருந்ததா?

இல்லை. நமது புண்ணியத் தமிழ் நாட்டில் வானத்திலே கருமேகங்கள் சூழ்ந்து கொண்டிருந்த காலம் அது! வட வேங்கடத்தையும் தென் குமரியையும் உள்ளடக்கி நின்ற தமிழ் கூறும் நல்லுலகத்தை, தனது அகன்ற அலைக் கைகளால் அணைத்துக்கொண்டு கோஷமிடுகிறதே முக்கடல், அந்தக் கடலின் பரப்பிலே, ஆயிரம் ஆயிரம் கப்பல்கள் சேர நாட்டையும் பாண்டிய நாட்டையும் சுற்றிக் கொண்டு வந்த காலம் அது! உள்நாட்டுக் கலகங்களும், வெளி நாட்டார் படையெடுப்புமாக ராஜ்யம் புகைந்து கொண்டிருந்தது! வேளிர்களும், முத்தரையர்களும், இன்னும் பல சிற்றரசர்களும் பல்லவர்களை எதிர்த்து நின்றதோடு, பாண்டியரையும் சோழரையும் சேர மன்னர்களையும் மையமாக வைத்துத் தங்களுக்குள்ளே சதுரங்கம் ஆடினார்கள். தமிழ் மொழியினிடத்திலும், தமிழர்களுடைய பழமையான பண்பாட்டிலும், மெய்யான ஈடுபாடுகொண்டிருந்த தமிழ் மூவேந்தர்கள், எவ்வகையான கிளர்ச்சியை எந்த முறையிலே உருவாக்கித் தமிழர்களின் வீர மரபை நிலைநாட்டலாம் என்று, துடிதுடித்துக் கொண்டிருந்தார்கள். சேர, சோழ, பாண்டியர்களின் கனவு வடிவாகிக் கொண்டிருந்த வைகறைப் போது அது! அந்தக் கனவு விடியும் வேளையைத் தமிழ்க் குலம் எதிர் நோக்கி, வானம்பாடியாகச் சிறகடித்து உதய கீதம் பாடுவதற்காகத் துடித்துக் கொண்டிருந்தது.

இந்தச் சூழ்நிலையிலேதான் பல்லவ பீடத்தில் அமர்ந்தான் அந்தச் சிறுவன்! அவன் அமர்ந்த வினாடியிலிருந்து சம்பவங்கள் ஒன்றன்பின் ஒன்றாக, அடுக்கு அடுக்காக, விறுவிறு என்று தொடர ஆரம்பித்தன. அது ஒரு மகோன்னதமான சரித்திரம்! வீரமும், சோகமும், காதலும், கனவுகளும், சூழ்ச்சியும், போர்களும் நிரம்பிய கதை அது! அந்த வரலாற்றுக் கதையை ஆரம்பத்திலிருந்து தெரிந்து கொள்ள வேண்டுமானால், நாம் இப்பொழுது தென் கடலின் கரையிலே, பாண்டிய நாட்டின் தென்கோடி எல்லையிலே நிற்கும் சங்குமுக விநாயகரை, வலம் வந்து வணங்கி விட்டு, அவருடைய சந்நிதியின் முன்பாக அலை வீசுகிற அந்தக் கருநீலக் கடலுக்குள்ளே போய், பல காதங்கள் கடந்து நிற்கிற ஏகாந்தமான வலம்புரித் தீவுக்குச் செல்ல வேண்டும். (தொடரும்)

# திருமூலர்



அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவராகிய திருமூலர் என்னும் சித்தர் பெருமான், கயிலாய மலையில் நந்தி தேவரின் திருவருள் பெற்ற யோகி! பொதிகை மலையிலிருந்த தமது நண்பர் அகத்தியரைக் காணப் புறப்பட்டவர் வடக்கேயிருந்து தெற்கு நோக்கி வரும்போது, திருவாவடுதுறைக்கு அருகே உள்ள சாத்தனூரில் பசுக்களை மேய்த்துக் கொண்டிருந்த ஓர் இடையன் பாம்பு கடித்து இறந்து கிடப்பதையும் பசுக்கள் அவனைச் சுற்றி நின்று கண்ணீர் வடிப்பதையும் கண்டார். உடனே



இரக்கம் அதிகரித்தவராய், தமது உடம்பை மரத்தின் மேல் வைத்து விட்டு 'பரகாயப் பிரவேசம்' என்ற சித்தியினால் இடையனுடைய உடம்பிலே புகுந்து கொள்கிறார்.. பசுக்கள் ஆனந்தம் அடைந்து குதிக்கின்றன. மூலன் என்ற அந்த இடையனுடைய உடம்பிலே புகுந்த சித்தர், பசுக்களை அவற்றின் வீடுகளில் சேர்த்து விட்டுத் திரும்பும்போது, மூலனுடைய மனைவி வழி மறிக்கிறாள். "என்னை விட்டு விட்டு எங்கே போகிறாய்?" என்கிறாள். "பெண்ணே நீ வேறு, நான் வேறு, என்னைத்



தொடாதே " என்கிறார் சித்தர். கணவனுக்கு மூளைக் கோளாறு அல்லது தன்னை விலக்கப் பார்க்கிறான் என்று புரியாத மூலனுடைய மனைவி, கணவனைப் பஞ்சாயத்து சபைக்கு முன்னால் கொண்டு நிறுத்துகிறாள். மூலனுடைய பேச்சைக் கேட்ட பஞ்சாயத்தார், " அம்மா, உன் கணவன் காட்டுக்குப் போன இடத்தில் ஞானோதயம் பெற்றிருக்கிறான். இனி அவனை இல்லறத்துக்கு அழைக்காதே !" என்று தீர்ப்புக் கூறி விடுகின்றனர்.



சித்தர் காட்டுக்குத் திரும்பி வந்து தமது உடலைத் தேடினார். மரத்தில் வைத்துப் போன உடலைக் காணோம்!

"இறைவனுடைய திருவுளம் இதுபோலும்!" என்று கருதியவராய், மூல னுடைய உருவிலேயே முனிவராக விளங்கினார். திருவாவடுதுறையிலே படர் அரசின் கீழ் பல்லாண்டுகள் தவம் இருந்து "திருமந்திரம்" என்ற அற்புதமான ஞானப் பாடல்களைப் பாடி அருளினார் திருமூலர்.

"தேவியின் கடிதம்" என்ற தலைப்பில் ஒவ்வொரு வாரமும் சகோதரி வசுமதி ராமசாமி அவர்கள் பெண்மணிகளுக்கு என்று தொடர்ந்து பல விஷயங்களை எழுதுவார் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். — ஆசிரியர்

# தேவியின் கடிதம்

வசுமதி ராமசாமி

அன்புக்குரிய சகோதரி சுஜாதா,

நீ அன்புடன் எழுதிய கடிதம் கிடைத்தது. தமிழ் நாட்டு விஷயங்களைப் பற்றி அவ்வப்பொழுது அறிந்துகொள்ள ஆசைப்படுகிறாய். ஆம்! பாரதத்தின் தலைநகரான புது தில்லியில் இருந்தால் தமிழ் நாட்டு அபிமானம் அதிகமாகத்தான் இருக்கும். சென்னையில் இருக்கும்பொழுது அடுத்த வீட்டுச் சகோதரியுடன்கூட நெருங்கிப் பழக மாட்டோம். வடநாட்டுக்குப் போய் விட்டால் அங்கே இருக்கும் தமிழ் நாட்டுச் சகோதரிகளுடன் ஒற்றுமையாக இருக்கத் தோன்றுவது இயற்கை.



நான் விவரமாக ரஸமாகக் கடிதம் எழுதுவேனென்று புகழ்ந்திருக்கிறாய். அது எனக்குப் பெருமையாக இல்லையென்று சொல்வதற்கில்லை.

மதிப்புக்குரிய பிரதமர் ஜவாஹர்லால் நேரு அவர்கள் தம் புதல்விக்கு எழுதிய கடிதங்கள் இன்று உலகம் விரும்பிப் படிக்கும் அறிவுரைகள் நிரம்பி இருக்கின்றன. தமிழ் நாட்டுத் தலைவர் திரு எஸ். சத்தியமூர்த்தி அவர்கள் தம் அருமை மகளுக்கு எழுதிய கடிதம் அபூர்வ விஷயங்களைத் தாங்குவதாக அமைந்திருக்கிறது.

கடிதம் எழுதுவது ஒரு கலை. அறிவாளிகள் சிந்தனையில் எவ்வளவோ விஷயங்கள் கடைந்தெடுக்கப்படும். சிந்தனை செய்யும் சக்தி எல்லோருக்குமே வருவதில்லை. ஒவ்வொரு சின்ன விஷயத்தையும் உள்ளும், புறமும் பார்க்கும் ஆற்றல் அனைவருக்கும் ஏற்படுவதில்லை. ஓரளவு மன அமைதி, பக்குவம் வந்தால்தான் எதையும் தெளிவாக அறிய முடிகிறது.



பெண்கள் கடிதங்கள் எழுதிக் கொள்ள நிறைய விஷயங்கள் இருக்கின்றன. குடும்பம், சமூகம், கல்யாணம், வீடு, மனத்தத்துவம், தோட்டம், ஆடை அலங்காரம், வெளித் தோற்றம், குழந்தை வளர்ப்பு, இயற்கை, பிரயாணம், பண்பாடு, நிகழ்ச்சிகள், ஆத்மீகம், வைத்தியம், நகரப் பொது நிகழ்ச்சிகள், கலை முதலிய அநேக விஷயங்களைப் பற்றி நீ கடிதம் எழுதவேணுமெனக் கேட்டிருக்கிறாய். முயற்சிக்கிறேன்.

நம் பண்பாட்டிற்கு ஏற்ப எந்த நல்ல காரியம் ஆரம்பிப்பதற்கு முன்னும் நாம் பிரார்த்தனை செய்வது வழக்கம். எனவே பிரார்த்தனையைப் பற்றி ஒரு மகிழ்ச்சிக்குரிய விஷயத்தை முதல் கடிதத்தில் தெரிவிக்கிறேன்.



சென்னையை அடுத்துள்ள கிண்டி ராஜ பவன் மாளிகைத் தோட்டத்தில் காந்தி மகாத்மாவின் நினைவுச் சின்னமாக ஒரு பிரார்த்தனை மண்டபம் நிறுவி இருப்பதை நீ அறிந்திருப்பாய். காந்தி மகானின் பிரார்த்தனை உலகநலப் பிரார்த்தனை. அவர் நம்மைப்போல் சொந்த நலனுக்குப் பிரார்த்தனை செய்யவில்லை. காந்தி மண்டபத்தில் ஒவ்வொரு மாதக் கடைசி வெள்ளிக்கிழமை மாலை 5-30 மணிக்குப் பஜனை, கூட்டுப் பிரார்த்தனை, பக்திப் பாடல்கள், அரிய சொற்பொழிவுகள் நடைபெறுகின்றன. கோபுர சின்னத்துடன் அமைக்கப்பட்ட காந்தி மண்டபத்தின் மேல் தளம் நீலவானம்தான். அந்த மணி மண்டபமும், விரிந்து பரந்து கிடக்கும் நீலவானமும், சூழ் நிலையும் நம் மனத்தில் விசால மனப்பான்மையை உண்டாக்குகின்றன. காந்தி மகானின் புனிதமான பிரார்த்தனை, எளிய வாழ்க்கை, இவைகளுக்கு ஏற்ப அமைந்துள்ளது மண்டபம். வெளிக் கதவு பார்ப்பதற்கு மிக அழகாக இருக்கிறது. வெறும் அழகுக்குத்தான் கதவு. உள்ளே இருக்கும் பொருள்களை வைத்துப் பூட்டுவதற்கல்ல. தூய உள்ளத்துடன் அந்தக் கோவிலில் நுழைந்தால் வீண் பணச் செலவின்றி அவரவர் இஷ்ட தெய்வத்தை உள்ளக் கமலத்தினால் பூஜிக்கலாம். வெளியூரிலிருந்து வருபவர்கள் சென்னை நகரில் பார்த்துப் பயன் பெற வேண்டிய மிக முக்கியமான இடம் காந்தி மண்டபம்தான். மற்ற மற்ற விஷயங்கள் அடுத்த கடிதத்தில்.



—பூமாதேவி

# நெய்வேலியில் கருப்புத்தங்கம்

**பகீரதன்**

சென்ற பெப்ருவரி மாதம் இருபத்தொன்பதாம் தேதி தென்னாற்காடு மாவட்டத்தில் புகழ் பெற்ற வடலூருக்கு அருகில் உள்ள நெய்வேலிக்குப் போயிருந்தோம். அங்கே ஒரு அதிசயமான காட்சியைக் கண்டோம்; இதுவரை கேள்விப்படாத மிகுந்த வியப்பளிக்கும்பல செய்திகளையும் கேட்டோம்.

நானூறு அடிகளுக்குக் கீழே இன்னும் ஆழமாக அங்கு பூமியைக்குடைகிறார்கள். ஒருஇடத்தில் அல்ல, இரண்டு இடங்களிலல்ல. இருபது இடங்களில் குடைந்திருக்கிறார்கள். குடைந்த இடங்களில் எல்லாம் மிகப் பெரிய இரும்புக் குழாய்களைப் புகுத்தி வைத்திருக்கிறார்கள். இல்லை; இருபது இடங்களில் மட்டும் குடைந்திருக்கிறார்கள் என்று சொன்னால் போதாது. முந்நூறு இடங்களில் நானூறு அடி ஆழம் பூமியைக் குடைந்திருக்கிறார்கள்.

“என்ன அதிசயம்! முந்நூறுக்கு மேற்பட்ட இடங்களில் பூமியைக் குடைந்து குடைந்து பார்த்திருக்கிறார்களா! அதிலும் நானூறு அடி ஆழத்துக்கு!”

“ஆமாம்; முந்நூறு இடங்களில் சென்ற எட்டு ஆண்டுகளாகப் பூமியைக் குடைந்து குடைந்து பார்த்திருக்கிறார்கள். ஒவ்வொரு இடத்திலும் மண் அமைப்பு எப்படி இருக்கிறது! நானூறு அடிக்குக் கீழே பூமியில் என்ன என்ன இருக்கின்றன என்று கவனமாக ஆராய்ந்து பார்த்திருக்கிறார்கள்.”

“இது என்ன கூத்து! முந்நூறு அடி நானூறு அடி என்று பூமியைக் குடைவானேன்! பூமிக்கு அடியில் என்ன இருக்கிறது என்று பார்ப்பானேன்! அதிலும் முந்நூறு இடங்களில் ஆராய்வானேன்! இதனால் யாருக்கு என்ன லாபம்!”

“சரியான கேள்வி! இதை முன்னமேயே கேட்பதுதானே! நெய்வேலியில் குடைந்திருக்கும் ஒவ்வொரு குழியும் பொன் கொழிக்கும் குழியாகும். இந்தக் குழிகளின் மூலமாகத் தமிழ் நாட்டின் எதிர்காலம் உரு மாறிவிடப் போகிறது! தமிழ் நாட்டின் உருவம் எழிலுடன் விளங்கப் போகிறது. நெய்வேலியில் நடைபெற்று வரும் ஆராய்ச்சியின் பலனைத் தமிழ் மக்கள் எத்தனை எத்தனையோ வகைகளில் பயன் அடையப் போகிறார்கள்.”

தமிழ் மக்கள் மட்டும் ஒற்றுமையாக இது போன்ற நிலவள ஆராய்ச்சித் துறைகளில் உழைக்கத் தொடங்கி விட்டார்களானால், தமிழ் நாட்டின் வளம் எத்தகையது என்பதையும் உணர்ந்து விட்டார்களானால், உணர்ந்து அந்த வளத்தைச் சரியான முறையில் உபயோகப்படுத்தத் தெரிந்து கொண்டார்களானால், அப்புறம் தமிழ் மக்களால் சாதிக்க முடியாத காரியம் ஒன்றுமே கிடையாது. தமிழ் அன்னை அவர்களுக்குக் கேட்டதையெல்லாம் இரண்டு கைகளாலும் வாரி வாரிக் கொடுத்து உதவி வருவாள்.

—செல்வம்
எத்தனை உண்டு
புவிமீதே—அவை
யாவும் படைத்த
தமிழ்நாடு

என்று பாட்டுக்கு ஒரு புலவன் பாரதி தமிழகத்தைப் புகழ்ந்து, புகழ்ந்து மகிழ்ச்சியுடன் பாடினாரே அது பொய்யல்ல. உண்மை.

இந்த உண்மையை உணர்ந்து தமிழ் நாட்டின் வளத்தை உபயோகப்படுத்தினால் தொழில் துறையில் அதல பாதாளத்தில் வீழ்ந்து கிடக்கும் தமிழ் நாட்டை மகோன்னத நிலைக்குக் கொண்டு வந்து விடலாம். தரித்திரம் பிடுங்கித் தின்னும் தமிழ் நாட்டைச் செல்வம் கொழிக்கும் சிறப்புமிக்க நாடாகச் செய்துவிடலாம். இதன் மூலம் பாரத நாட்டின் செல்வ நிலையையே உயர்த்தலாம்.

நாட்டில் இருக்கும் வளங்களைத் தெரிந்து கொண்டு அதை நல்ல முறையில் பயன்படுத்த முயன்றால் அதனால் ஏற்படும் சக்தி அபாரமானது. அது செய்யக்கூடிய மகத்தான அற்புதங்களை எல்லாம் இன்று வளர்ந்து வரும் உலக நாடுகளில் நடந்து வரும் அதிசயங்களில் இருந்து தெரிந்து கொள்ளலாம்.

இப்படிப்பட்ட அதிசயத்துக்கு அடிகோலியிருக்கும் அற்புதத்தைத்தான் நெய்வேலியில் கண்டோம். உலகத்தில் வேறு இடங்களில் நடைபெற்று வருவதுப்போல பெரிய அளவிலே அல்ல; சின்ன அளவிலேதான். ஆனாலும், அற்புதங்கள் இரண்டு இடங்களிலும் ஒன்றேதான் என்பதில் சந்தேகமில்லை.

பூமிக்கு அடியில் புதைந்து கிடக்கும் நிலக்கரியைப் பயன்படுத்தும் சக்தி உதயமாகும் போது உலகில் வேறு இடங்களில் இதுபோலச் சிறு அளவிலேதான் உதயமாயிற்று. அதுதான் பிறகு பிரும்மாண்டமான சக்தியாகப் பரிணமித்து ஓங்கி வளர்ந்தது.

அதுபோலவே இன்று நெய்வேலியிலும் சிறிய அளவில் உதயமாகி இருக்கும் பூமிக்கு அடியில் கிடக்கும் நிலக்கரியைப் பயன்படுத்தும் சக்தியானது இன்னும் பத்து ஆண்டுகளிலோ, இருபது ஆண்டுகளிலோ, முப்பது ஆண்டுகளிலோ அபரிமிதமாக வளர்ந்து தமிழ் நாட்டில், ஏன் பாரதநாடு முழுவதிலுமே புதிய பொன் யுகத்தை நிலைநிறுத்தாது என்று யார் சொல்ல முடியும்!

“இது என்ன பரவசம்! பொன் உலகமாவது! புது யுகமாவது! இதுவரையில் இல்லாத அதிசயமாக நெய்வேலியில் அப்படி என்னதான் பிரமாதமாக நடைபெற்று வருகிறது!”

“மன்னிக்க வேண்டும். இதோ, ஆரம்பத்தில் இருந்தே தொடங்கி விடுகிறேன்.”

நெய்வேலியில் பூமிக்கு அடியில் ஏராளமாக நிலக்கரி இருக்கிறது. அது எடுக்க முடியாமல் அதற்கு இடையூறாக அது இருக்கும் இடத்துக்குக் கீழே தண்ணீர் இருக்கிறது. அந்தத் தண்ணீர் தரை மட்டத்திலிருந்து நானூறு அடிக்குக் கீழே ஓடுவதால் அது அங்கிருந்து வெளி வருவதற்குத் தன் சக்தி அத்தனையும் உபயோகப்படுத்திக் கொண்டிருக்கிறது. அதாவது பூமியைப் பிளப்பதற்கு முயன்று வருகிறது. அது எவ்வளவு பலத்துடன் வெளிவர முயன்று வருகிறது தெரியுமா!

ஒரு சதுர அடி தண்ணீர் வெளியே வந்தால் அது வரும் வழியில் உள்ள எட்டு டன் எடையுள்ள நிலக்கரியைப் பெயர்த்துக் கொண்டு வெளியே வரும் பயங்கரசக்தி கொண்டதாக இருக்கிறது. அதனால் நிலக்கரியை வெட்டி எடுப்பதற்குத் தண்ணீரின் மேல் நோக்கித் தள்ளும் அந்த அபாய சக்தியைக் குறைக்க வேண்டும். அப்படிக் குறைப்பதற்காக நெய்வேலியில் இருபது ராட்சஸக் குழாய்கள் இறக்கி யிருக்கிறார்கள். இக்குழாய்கள் ஒவ்வொன்றும் நிமிஷத்துக்கு ஆயிரம் காலன் தண்ணீரை வெளியில் கொண்டு வந்து கொட்டும். இந்தத் தண்ணீர் இறைக்கும் குழாய்களை இயக்கி வைப்பதற்காக நமது கைத்தொழில் மந்திரி கனம் பக்தவத்சலம் சென்ற பெப்ருவரி மாதம் 29-க் தேதி நெய்வேலிக்குச் சென்றார்.

இந்தத் தண்ணீர் இறைப்பு வேலை தொடங்கும் வைபவத்தில் கலந்து கொள்வதற்காகச் சென்னையிலிருந்து முப்பத்தேழு பத்திரிகைகளின் பிரதிநிதிகளை இந்திய சர்க்கார் அழைத்துப் போனார்கள்.



நிமிஷத்துக்கு ஆயிரம் காலன் தண்ணீர் வந்து விழும் வேகத்தையும், பிறகு ஆறாகப் பெருகி ஓடுவதையும், நெய்வேலியில் உள்ள மணலை எடுத்து மந்திரி கனம் பக்தவத்சலம் பார்வை விடுவதையும், நிலக்கரி எடுக்கும் சோதனைக் குழியில் ஏராளமாகத் தண்ணீர் நிறைந்து இருப்பதையும் படத்தில் காணலாம்.



இருநூறு குதிரை சக்தி கொண்ட தண்ணீர் இறைக்கும் மின்சார இயந்திரங்களில் ஒன்று. இது போல இருபது தண்ணீர் இறைக்கும் இயந்திரங்கள் இரவு பகல் இருபத்திநாலு மணி நேரமும் நெய்வேலியில் தண்ணீர் இறைத்துக் கொண்டிருக்கின்றன.

சென்னையிலிருந்து நெய்வேலிக்குப் பஸ்ஸில் தான் சென்றோம். பிரசித்தி பெற்ற சென்னை சர்க்கார் பஸ்ஸில்தான் சென்றோம்!

சர்க்கார் பஸ்களிலும், இதர பஸ்களிலும் போகும் போதெல்லாம் எனக்கு ஒரு யோசனை தோன்றுவது உண்டு. அதன் இன்ஜின் என்னவோ சொல்லுகிறதே, அது என்னத்தைச் சொல்லுகிறது என்று அடிக்கடி யோசனை உண்டாகும். பஸ் ஓடும்போது அதன் இயந்திரம் எதையோ ஓயாமல் நம் காதில் வந்து ஓதுவது போலிருக்கும். ஆனால் என்ன என்று மட்டும் விளங்காது. ஏதோ நமக்குத் தெரிந்த விஷயத்தையே மறந்து போய், அதை நினைவுபடுத்திக் கொள்ள முயலும் போது ஏற்படும் சங்கடம் உண்டாகும்.

மேற்படி சங்கடம் இந்தப் பிரயாணத்தின் போது எனக்கு நிவர்த்தியாயிற்று. பஸ்ஸின் இயந்திரம் "தொழில் வளர்ப்போம்!" "தொழில் வளர்ப்போம்!" என்னும் வார்த்தையைத்தான் சொல்லிக் கொண்டு வந்தது என்பதைத் தெரிந்து கொண்டேன்.

இப்படி இந்தத் தடவை மட்டும் எனக்குத் தெளிவாயது ஏன் என்று கேட்டால் அன்று பஸ்ஸில் பிரயாணம் செய்யும் போது பத்திரிகைப் பிரதிநிதிகள் செய்த வாதப் பிரதிவாதங்களும், அதனால் ஏற்பட்ட முடிவும்தான்.

அன்று பஸ்ஸில் பிரயாணம் செய்த பத்திரிகையாளர்கள், நமது நாட்டை உருவாக்கும் நவயுகச் சிற்பிகள் பல விஷயங்களைப் பற்றி வாதப் பிரதிவாதங்கள் புரிந்து வந்தனர்.

நம் நாட்டின் சமூக வளர்ச்சியில் அக்கறை கொண்ட ஒரு பத்திரிகையாளர், "நமது நாடு முன்னேறுவதற்குக் காரணம் சமூகத்தில் புரையோடிக்கிடக்கும் சாதிப் பிரிவுகள்தான். அதிலும் மேல் சாதியினரின் சுயநலப் போக்கால்தான் சமூகம் சீர்குலைந்தது. அதனால் நாடும் சீர் குலைந்தது" என்று உணர்ச்சியை அள்ளி நெருப்பாகக் கொட்டினார்.

சாதி முறையில் ஊறி அதிலேயே திளைத்து மக்களையும் அவர்கள் உணர்ச்சிகளையும் மறந்த இன்னொருவர் "அது இல்லை காரணம்" என்று மெயில் வேகத்தில் அலறினார்.

"இப்படி நாம் வீண் சண்டை போட்டுக் கொண்டிருந்ததால்தான் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் தமிழ் நாடு புறக்கணிக்கப்பட்டு விட்டது. வட நாடு முந்திக் கொண்டது" என்றார் நவ இந்தியாவின் முன்னேற்றத்தில் ஆர்வமுள்ள இன்னொருவர்.

"எடுத்ததற்கெல்லாம் வடநாடு, தென்னாடு என்று பிரித்துப் பிரித்துப் பேசக் கூடாது" என்று அங்கலாய்த்தார் வேறொருவர்.

"விஷயங்களைப் பிரித்து விளக்குவதற்காக வட நாடு தென்னாடு என்று சொல்லி விவாதிப்பதால் ஒன்றும் கெட்டு விடாது. மனத்தில்தான் பேதம் கூடாது. தமிழ் மக்களுக்கு முதலில் தமிழ் நாடு, பிறகுதான் பாரதம்" என்றார் இன்னொரு பத்திரிகையாளர்.

இந்த விவாதங்களுக்கெல்லாம் மேலே பஸ் இயந்திரத்தின் வழக்கமான சத்தம் "கணீர்" என்று கேட்டது. "தொழிலைப் பெருக்குவோம்!" "தொழிலைப் பெருக்குவோம்!" என்று கூவியது. ஆம், அப்படிக் கூவியது பஸ் இயந்திரத்தை இயக்கிய தொழிலாளியின் குரல் தான். அவரும் ஒரு பத்திரிகையாளர். "நீங்கள் சொல்லும் வாதப் பிரதிவாதங்கள் எல்லாமே அடிபட்டுப் போகும், தேசத்தில் தொழிலைப் பெருக்கினால். தொழில்கள் வளர்ந்தால் செல்வம் வளரும். செல்வம் வளர்ந்து அது மக்கள் மத்தியில் சமமாகப் பிரிக்கப்பட்டால் இப்பொழுது நிலவிடம் குடிகொண்டிருக்கும் சிறுமைகள் மறையும். சாதி, ஏற்றத் தாழ்வு எல்லாமே அழிந்து போகும். ஆகையால் 'தொழிலைப் பெருக்குவோம்'" என்றார்.

இப்படிப்பட்ட தொழிலாளிகள் துணையுடன் ஓயாமல் தொழிலைப் பெருக்க உதவி செய்து வரும் பஸ் இயந்திரம் 'தொழிலைப் பெருக்குவோம்' 'தொழிலைப் பெருக்குவோம்!' என்று கூவுவதற்குக் கேட்கவா வேண்டும்!

தொழிலைப் பற்றி ஒரு வார்த்தை. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் தொழில் வளத்தை வட நாட்டில் வளர்ப்பதற்கு ஏற்பாடு செய்து நடந்து வருவது நாடறிந்த உண்மை. ஆனால் அதற்கு அவர்கள் கூறும் காரணம்தான் வேடிக்கையானது. வட நாட்டில் வற்றாத ஜீவ

நதிகள் இருக்கின்றன. அதனால் அங்கு பெரிய பெரிய அணைகள் கட்டப்படுகின்றன. அருவி மின்சார நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டு வருகின்றன. அதன் மூலம் பெரிய பெரிய தொழிற்சாலைகள் உண்டாகின்றன. தென்னாட்டில் என்ன இருக்கிறது என்று சிலர் வாய் கூசாமல் கேட்கிறார்கள். அது எவ்வளவு அறிவுக் குறைவான விஷயம் என்பதைச் சென்னையிலிருந்து நெய்வேலிக்குப் பஸ்ஸில் செல்லும்போது தெரிந்துகொள்ள முடிந்தது.

சென்னையிலிருந்து விருத்தாசலம் வரை சாலையின் இரண்டு பக்கங்களிலும் கண்ணுக்கெட்டிய தூரம் வரையில் நிலம் பரந்து தரிசாகக் கிடக்கிறது. எப்பேர்ப்பட்ட பூமி! பொன் விளையும் பூமி! கவனிப்பார் அற்றுக் கிடக்கிறது. இந்த நிலங்களுக்குப் பாய வேண்டிய பாலாற்றில் தண்ணீர் இல்லை. தண்ணீர் இல்லாத ஆறு பாலாறு! வேண்டிய அளவு தண்ணீர் உள்ள ஜீவ நதிதான். ஆனால் தண்ணீர் மைசூரிலேயே தடுக்கப்படுகிறது. அப்படித் தடுக்காமல் எல்லாரும் உபயோகப்படுத்தும்படி பாலாற்றில் தண்ணீர் வருவதற்கு அவசரமான ஏற்பாடுகள் செய்யக் கூடாதா! தென்னாற்காடு மாவட்டத்தில் எத்தனையோ ஏரிகள் இருக்கின்றன. அவைகளை ஆழமாக வெட்டி அவற்றின் கரைகளைப் பலப்படுத்தி மழைத் தண்ணீரைத் தேக்குவதற்காவது ஏற்பாடு செய்யலாம். நாட்டு நலத்தில் அக்கறை கொண்டு அதே சிந்தையில் தொண்டாற்றினால் இவை போன்ற காரியங்களில் வெற்றி கிடைக்கும் என்பதில் சந்தேகமில்லை.

தென்னாட்டில் வெறும் குடிசைத் தொழில் மட்டும்தானா வளர்க்க முடியும்! பனை வெல்லம் காய்ச்சுதல், நூல் நூற்றல், கூடை முடைதல், தேனீ வளர்த்தல் போன்ற தொழில்தானா செய்ய முடியும்! பெரிய பெரிய தொழிற்சாலைகள் உண்டாக்க முடியாதா! உண்டாக்கலாம். அப்படிப்பட்ட தொழிற்சாலைகள் உண்டாவதற்கு வேண்டிய நிலக்கரி கிடைக்கும் நெய்வேலிக்குத்தான் இப்பொழுது சென்று கொண்டிருக்கிறோம். சென்ற எட்டு ஆண்டுகளாக ஒன்றரைக் கோடி ரூபாய் செலவிட்டு நிலக்கரி எடுக்கும் ஆராய்ச்சியில் ஈடுபட்டு அதில் வெற்றி முகத்தை எட்டிப் பார்த்து நிற்கும் நெய்வேலிக்கு வந்து விட்டோம்.

நெய்வேலியை அடைந்தவுடன் பத்திரிகையாளர்களின் வாதப்பிரதிவாதங்கள் 'டக்' என்று முடிந்து விட்டன. அவரவர்கள் தங்கள் தங்கள் பெட்டி படுக்கைகளை எடுத்துக் கொண்டு அவரவர்களுக்கென்று ஒதுக்கப்பட்டிருக்கும் அறைகளுக்குச் சென்றுவிட்டனர்.

உற்சாகமுள்ள சில பத்திரிகையாளர்கள் மட்டும் தங்கள் அறையில் படுத்துத் தூங்கவில்லை. நெய்வேலி நிலக்கரிச் சுரங்க அதிகாரியைத் தேடிப் பிடித்து அவரிடம் பல கேள்விகளைக் கேட்டுத் துளைக்க ஆரம்பித்து விட்டார்கள். அவரும் பத்திரிகையாளர்களின் கேள்விகளுக்கெல்லாம் பதறாமல்பதில் கூறினார்.

"நெய்வேலி நெய்வேலி என்றால் என்னமோ ஏதோ என்று நினைத்துக்கொண்டிருந்தோம். ஒரே பொட்டலாகத்தானே இருக்கிறது!"

"பூமிக்கு மேலே அது எப்படித் தெரியும்! பூமிக்கு அடியில்தான் நிலக்கரி கிடக்கிறது."



"நிலக்கரியினால் என்ன உபயோகம்!"

"என்ன அப்படிக் கேட்டு விட்டீர்கள்! நிலக்கரி இருக்கும் இடத்தைச் சொர்க்க பூமி என்றுதான் சொல்ல வேண்டும். நிலக்கரி கேட்ட வரமெல்லாம் கொடுக்கும் கற்பக தரு; காமதேனு. தமிழ் நாட்டின் தொழில் முகத்தையே மாற்றி அமைத்து மகிழ்விக்கப் போகும் கருப்புத் தங்கமல்லவா நிலக்கரி" என்று சொல்லி விட்டு இன்னும் பல விஷயங்களையும் விளக்கிக் கூறினார் அந்த அதிகாரி.

நெய்வேலியில் கிடைக்கும் நிலக்கரியினால் என்னென்ன அற்புதங்கள் உண்டாகலாம் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள்:

1. மின்சார உற்பத்தி பெருகும். இன்றைய தினம் சென்னை ராஜ்யத்தில் உற்பத்தியாகும் மின்சாரத்தைப் போல இரண்டு மடங்கு மின்சார சக்தி நெய்வேலியில் உண்டாக்கலாம். அதனால் இப்போது ஏற்பட்டிருக்கும் மின்சார வெட்டு போன்ற தொல்லைகள் ஏற்படாது. மின்சாரவெட்டு காரணமாகச் சென்னை, கோவை, மதுரை போன்ற பெரிய நகரங்களில் உள்ள ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலை செய்யும் தொழிற்சாலைகளில் தொழிலாளர்களை வேலையிலிருந்து நிறுத்துவது போன்ற சங்கடங்கள் ஏற்படாது. மின்சாரத்தைக் கொண்டு சிறு சிறு தொழிற்சாலைகள் நாட்டில் பரவலாக வளரும். விவசாயத்துக்கு வேண்டிய தண்ணீர் இறைக்கும் இயந்திரங்களும் ஏராளமாகப் பெருகும். அதனால் தரிசாகக் கிடக்கும் நிலங்கள் நம் கண்ணை உறுத்தாது.

2. அமோனியம் சல்பேட் என்ற ரஸாயன உரம் தயாரிக்கும் மிகப் பெரிய உற்பத்தித் தொழிற்சாலை ஏற்படுத்தலாம். இந்த உரம் கெட்டியான நிலத்தை மிருதுவாக்கும். நிலம் அதிகமாகத் தண்ணீரை உறிஞ்சிக் கொள்வதற்குப் பயன் ஏற்படும். விளைச்சல் ஒன்றுக்குப் பல மடங்கு உயரும்.

3. அடுப்புக் கரிக்குப் பதிலாக 'பிரிக்கட்' என்னும் கரிக் கட்டிகள் கிடைக்க வழி செய்யலாம். இந்தப் பிரிக்கட் கரிக் கட்டிகள் தயாரிக்கும் தொழிற் சாலையில் ஆயிரக்கணக்கான தொழிலாளர்களுக்கு வேலை கிடைக்கும். பிரிக்கட் கரி சாதாரணக் கரியைவிட அதிக உஷ்ண சக்தி கொடுக்கக் கூடியது. புகையில்லாதது. ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்கு எடுத்துப் போவதற்கு மிகவும் வசதியானது. இதனால் நாட்டில் விறகுப் பஞ்சம் ஒழியும். காடுகள் அழியாது. காடுகள் காப்பாற்றப்படுவதால் நாட்டில் பருவ மழை தவறாமல் பெய்யும்.

4. நமது நாட்டு முன்னேற்றத்துக்கு நல்ல சாலைகள் வேண்டாமா? சாலைகள் போடுவதற்கு வேண்டிய 'தார்' எண்ணெய் வேண்டிய அளவு கிடைக்கும்.

5. சுகாதாரத்துக்கு மிக முக்கியமான பினயில் பெரும் அளவில் தயாரிக்கலாம். பெட்ரோல், ஸ்பிரிட், டீஸல் எண்ணெய் முதலியவைகள் லட்சக்கணக்கான டன் அளவுக்குத் தயாரிக்கலாம். இதைத் தவிர கந்தகத் திராவகம் (ஸல்பூரிக் ஆஸிட்) வேறு உண்டாக்கலாம்.

இந்தப் பொருள்கள் எல்லாம் உற்பத்தி செய்யும் தொழில்கள் தமிழ் நாட்டில் ஆரம்பிக்கப்பட்டால் எத்தனை தொழிற்சாலைகள் நிர்மாணிக்க வேண்டியிருக்கும்! அவைகளில் எத்தனை ஆயிரம் பேருக்கு வேலை கிடைக்கும் என்பதைக் கற்பனை செய்து பாருங்கள்.

அது மட்டுமா! நெய்வேலியில் கிடைக்கும் நிலக்கரிப் பரப்புக்கும் மேலே கிடைக்கும் வெள்ளைக் களிமண்ணைக் கொண்டு அழகிய பீங்கான் கோப்பைகள், தட்டுகள், கூஜாக்கள், பொம்மைகள், முகப் பவுடர், நாமக்கட்டி, சாக்கட்டி, பற்பசை எல்லாம் செய்யலாம். சக்தி வாய்ந்த மின்சாரக் கம்பிகளைத் தாங்க வல்ல இன்சுலேட்டர்கள் செய்யலாம்.

என்ன! இவையெல்லாம் கேட்கக் கேட்க வியப்பாக இருக்கின்றனவா! தயவுசெய்து இந்தச் செய்தியையும் கேளுங்கள்:

தமிழ் நாட்டின் சரித்திரத்தில் மிக முக்கியத்துவம் வாய்ந்தது சேலம் மாவட்டம். அது போலவே தமிழகத்தின் பொருள் வளத்திலும் புதிய சகாப்தத்தைத் தொடங்கி வைக்கும் பேறு பெறப் போவது சேலம் மாவட்டம். சேலம் மாவட்டத்தில் எல்லா விதமான உலோகத் தாதுப் பொருள்களும் இருக்கின்றன. 'மாக்னிஸைட் ஓர்' என்னும் இரும்புத் தாதுப் பொருள் ஏராளமாகக் கிடைக்கின்றது.

"என்ன, சேலம் மாவட்டத்தில் இரும்பு கிடைக்கிறதா! அந்தச் செய்தி உண்மை தானா! சேலம் மாவட்டத்தில் எங்கெல்லாம் இந்த இரும்புத் தாதுப் பொருள் கிடைக்கின்றது! சொல்ல முடியுமா!"

"அப்படிக் கேளுங்கள், சொல்கிறேன். கஞ்ச மலை, கோதுமலை, தீர்த்த மலை, கொல்லி மலை, பச்சைமலை, பெருமாமலை, சித்தேரி மலை, கொத்தள மலை, கௌதமி மலை, நாமக்கல் அருகில் உள்ள ஆத்தூர் பள்ளத்தாக்கு இங்கெல்லாம் காந்த சக்தியுள்ள இரும்பு கிடைக்கும் குன்றுகள் இருக்கின்றன. இன்னும் சேலத்தில் பூமிக்கு நூறு அடிக்குக் கீழே இரும்புத் தாதுக்கள் இருக்கின்றன. அவை தொடர்ச்சியாகத் திருச்சி, தென்னார்காடு மாவட்டங்கள்வரை ஊடுருவிச் செல்கின்றன என்று பூகர்ப்ப ஆராய்ச்சி நிபுணர்கள் கூறுகிறார்கள்."

"என்ன இவை யெல்லாம் உண்மையா!"

"ஆமாம். உண்மைதான். தமிழ் நாட்டில் இருக்கும் இந்த இரும்புச் செல்வத்தை நாம் உபயோகப்படுத்திக் கொள்ள வேண்டாமா!" என்று கேட்டு விட்டு மேலே தொடர்ந்தார் சுரங்க அதிகாரி.

"சேலத்து இரும்பை எடுத்து உருக்குவதற்கு வேண்டிய சரியான சூழ்நிலை உருவாகி விட்டது. நெய்வேலி நிலக்கரி எடுக்க ஆரம்பித்தவுடன் சேலத்தில் இரும்பு ஆலைகள் நிறுவி அற்புதமான இயந்திரங்கள் செய்யலாம்."

"இவைகளை எல்லாம் கேட்கக் கேட்க ஒரே ஆச்சரியமாக இருக்கிறதே!"

"ஆமாம்! ஆச்சரியமும் வியப்பும் அளிக்கக் கூடிய விஷயங்கள் இன்னும் இருக்கின்றன. சேலம் சேர்வராயன் மலை உச்சியில் பாக்ஸைட் என்னும் மணல் கிடைக்கிறது. இந்த பாக்ஸைட்டைக் கொண்டு அலுமினியத் தொழிற் சாலை அமைக்கலாம். அலுமினியம் தாராளமாகக் கிடைப்பதால் விமானம் கட்டும் கூடங்கள் அமைத்து நமக்கு வேண்டிய விமானங்களை நாமே கட்டிக் கொள்ளலாம். இந்தக் காரியங்கள் எல்லாம் காரியத்தில் நிறைவேற்றி வைக்கக்கூடிய அற்புதமான சக்தி வாய்ந்தது நெய்வேலியில் கிடைக்கும் நிலக்கரி."

"திருச்சியில் ஏதோ அதிசயப் பொருள் கிடைப்பதாகவும், நெய்வேலி நிலக்கரியால் அதையும் பயன்படுத்தலாம் என்றும் கேள்விப் பட்டேனே!"

"திருச்சி மாவட்டம் அரியலூர் பெரம்பலூர் பாதையில் ஒதியம் என்ற கிராமத்தில் ஜிப்ஸம் கிடைக்கிறது."

"ஜிப்ஸமா! ஏதோ மந்திரச் சொல் மாதிரி அல்லவா மயக்குகிறது. அது என்ன!"

"மந்திர சக்தி படைத்ததுதான் ஜிப்ஸம். இதிலிருந்து சிமெண்ட், ரஸாயன எரு, மின்ஸார இன்சுலேட்டர், கல்நார்த் தகடுகள், ஆஸ்பத்திரிகளில் பாண்டேஜ் போட்டுக் கட்டுகிறார்களே அதற்கும் இன்னும் பல கண்ணைக் கவரும் சாமான்கள் செய்வதற்கும் உபயோகமாகும் பிளாஸ்டர் ஆப் பாரிஸ் மாவு, உயர்ந்தரகப் பல்பொடி எல்லாம் செய்யலாம்."

நெய்வேலியில் கிடைக்கப் போகும் நிலக்கரியினால் எத்தனையோ பொருள்கள் உற்பத்தி செய்யலாம். அதற்காக எத்தனையோ விதமான தொழிற்சாலைகள் உண்டாகலாம் என்பது இப்போது தெரிகிறதல்லவா! நெய்வேலியில் நிலக்கரி வெட்டி எடுக்கும் இடங்களுக்குச் செல்வதற்கு முன்னால் நிலக்கரியைப் பற்றிய இன்னும் சில ரஸமான விவரங்களையும் தெரிந்து கொள்வோம். (தொடரும்)

# அவருக்கு!

அழகும் நுட்பமும் வாய்ந்த
ஜெனித் பய்லட் கடிகாரம் அவருக்கு
அளிக்கத் தகுந்த ஒரு பரிசு!
18 ஜுவல்களில் இயங்கும் இந்த கடிகாரம்
அதிர்ச்சியாலும் காந்தத்தாலும் பாதிக்கப்
படாதது. க்ளுஸிடர் பாலன்ஸும்
மத்தியில் அமைக்கப்பட்ட விநாடி முள்ளும்
கொண்டது. அதன் ஸ்டெயின்லெஸ்
ஸ்டீல் கேஸில் தண்ணீர், தூசி புகாது.
மனதுக்குப் பிடித்த பலவித நவீன
டயல்களில் கிடைக்கும்.

மெ. 1833 ரு. 270/-

**ZENITH** *Pilot*




**FAVRE-LEUBA & CO. LTD.**

தபால் பெட்டி 845
பம்பாய்

தபால் பெட்டி 474
கல்கத்தா

N. 8



# கதையும் கல்யாணமும்

சுபஸ்ரீ

"'என்ன கிருஷ்ணு, சினிமாவுக்கு வரயா!"

"நான் வரவில்லையப்பா, எனக்குக் கதை கேட்கப் போகணும்."

"என்னடா கதை விடறே! 'அவனவான் ஆத்திலே சாப்பாடு'ன்னு பயப்படாதே! டிக்கட் செலவு என்னுடையது."

"நீயே டிக்கட்டு, டாக்ஸி, டிபன் எல்லாச் செலவும் ஏற்றுக் கொண்டாலும் நான் வர வில்லை. என்னுலே மூக்கானிபுரம் மூத்துஸ்வாமி தீக்ஷிதர் உபன்யாஸத்தை ஒரு நாள் கூட 'மிஸ்' பண்ண முடியாது."

"நீ சுத்த ஜாஸ்ராடா. வேதாந்தமும் கதையும் கேட்கும்படி விருத்தாப்பியம் உனக்கு வந்துடுத்தா!"

"ஏன் வசிக்கிறே! நீயும் ஒரு நாளைக்கு வாலேச் சுருட்டிண்டு வந்து உட்கார்ந்து தீக்ஷிதர் வாக்குக்குத் தலையை ஆட்டப்போறே!"

"உன் சாபம் பலிக்காது!"

*　　*　　*

தன்னுடைய வாதம் பலிக்காமற் போகவே வில்லை முறித்துப் போட்டு விட்டு விரைந்த விதுரர் போல் "விடு விடு" என்று வெளி யேறினன், ஆத்மநாதன். இங் சர்க்கின் கார்டனில் பொழுதைக் கழித்த பின்னர் பால்கடை ஒன்றில் கடர்கடப் பாலைப் பருகி விட்டு பி.பி. மாதுங்கா திசையில் நடக்க ஆரம்பித்தான்.

எதிரே ரயில்வே தொழிற்சாலையின் குறுக்காகச் செல்லும் பாதசாரிகள் பாலம்! டிஸம்பர் மாதத்துப் பனியில் நனைந்து இருளும் ஒளியும் மாறி மாறிச் சிதறிக் கிடக்க, தொலை தூரம் நீண்டு எதிர்ப்புறத்து இருளில் இறங்கி விட்ட பாலத்தில் மனித வாடையே இல்லை.

பின்னல் யாரோ வரும் அரவம். 'இதோ கூட ஒருவர் போகிருரே!' என்ற பேச்சொலி. ஆத்மா நடையைத் தளர்த்தினன்.

"என்ன ஸார், கதையைக் கேட்டு விட்டுப் போகிறீர்களா!" அறிமுகமற்ற கிழவரின் தொடர்புக் கேள்வி.

உபன்யாஸகரைப் பற்றி ஒரு போடு போட்டுத் தனது ஆத்திரத்தை வெளியிட வேண்டுமென்றுதான் ஆத்மா திரும்பினன். மறுகணம் கிழவருக்கு அருகே இசையுற நடந்து வந்த மலர்க் கொடி போன்ற இளம் பெண்ணின் வதனத்தைப் பார்த்தவுடன் அவனது சப்த நாடியும் அடங்கி, ஒரே ஒரு வார்த்தை மட்டும் சப்தித்தது. "ஆமாம்!"

கிழவர் 'வாக்கிங் ஸ்டிக்'கை அழுத்தி நடையை எட்டிப் போட்டார். "உங்களைப் போன்ற வாலிபர்கள் இந்த மாதிரி 'சத்' விஷயங்களில் ஈடுபடுவது ரொம்ப அபூர்வம். எனக்குப் பரம சந்தோஷம். நீங்கள் எங்கே வாசம்!" என்று கேட்டார் அவர்.

"பி. பி. மாதுங்கா — அக்கரையில்."

"நாங்களும் அங்குதான். அக்கரையில்லை; அபிரிவியாவில் குடி யிருந்தாலும் கதையில் அக்கறை இருந்தால் தூரம் பொருட்டல்ல!"

"காலமும் அகாலமல்ல."

"என் பெண் பார்வதியைப் பாருங்கோ. ஒரு நாள்கூடத் தவறுவதில்லை."

பெரியவர் பேச்சைக் கட்டளையாக மேற்கொண்டு ஆத்மா பார்வதியைக் கனிவுடன் பார்த்தான். அவளது அழகைக் கவனிக்க அவன் தவறவில்லை.

"எப்பா, இந்தப் பாலத்திலே நடமாட்டமே இல்லையே. தனியாகப்போகப் பயமா இருக்கு!"

"என்ன பயம்! என்னுடைய கையிலே கைத்தடி இருக்கிற வரையில் அஞ்சவே வேண்டாம். சிலம்பம் சின்னக் கண்ணுவின் பரம சிஷ்யனைப் பழகியவன். நாலு பேர் வந்தாலும் இன்னும் தாக்குப் பிடிக்கும்."

"அதிலும் பீமனுடைய வீரப் பிரதாபங்களைக் கூறக் கேட்டு அந்தக் கைகளில் விறுவிறுப்பு வேறு ஏறிக் கிடக்கிறது"—பார்வதியின் ஹாஸ்யத்வனி இது.

"ஐயோ! அப்படியானல் நான் ஒதுங்கிக் கொள்கிறேன்" என விரைந்தான் ஆத்மா.

மறுகணம் இன்னிசையான நகையொலியும், சற்றுத் தாமதித்து எழுந்த பொக்கைச் சிரிப்பின் அடக்கமான ஓசையும் எழுந்தன.

"உங்கள் கைத்தடியை மட்டும் நம்பிப் பாலத்து வழியிலே வர முடியாது" என்றாள் பார்வதி.

“அதற்கென்ன! இவரது அறிமுகம் கிடைத்து விட்டது. இவருடைய வழித்துணையும் தினமும் அகப்படுமல்லவா!”

“பேஷாக!” என்றான் ஆத்மா. அவன் மட்டுமென்ன, எந்த வாலிபப் பிள்ளையும் அந்தப் பதிலைத்தான் கூறியிருக்க முடியும்!

‘கிட்டிலெட்’ கினிமாத் திருப்பம் வரையில் ஓயாது லொட லொடத்த கிழவருக்கு, விசாரிப்புக்களிடையே ஆத்மாவின் தகப்பனாரும் அவரும் பால்ய நண்பர்கள் என்பதைக் கண்டு பிடிக்க அதிக நாழிகை ஆகவில்லை. அதற்குப் பின்னர் ஆத்மாவின் கண்கள் பார்வதியிடம் அதிக உரிமை பாராட்டின.

நல்ல உயரம்; நீண்ட கூந்தல்; கவர்ச்சிகரமான தேகக்கட்டு; உடம்பின் வளர்ச்சி நின்ற பிறகும் வளர்ந்து கொண்டே வந்தவைபோல் நீண்ட நயனங்கள்; பளிச்சென்று சிரிக்கும் போதெல்லாம் குழியும் கன்னங்கள். இவற்றின் கூட்டுத் தொகையை மனத்தில் கணக்கிட்டு மாளவில்லை ஆத்மாவுக்கு.

“அப்போ நாங்கள் வருகிறோம்.” கிழவரின் குரலைத் தொடர்ந்து ‘நமஸ்காரம்’ என்ற சொல்லை உதிர்த்து ‘மழலை’ப் பாணியில் ஒரு அபிநயக் கும்பிடு போட்டாள். பார்வதி விடை பெற்றுக் கொண்டபோது ஆத்மாவின் ஆத்மாவே பிரிவதுபோல இருந்தது.

*   *   *

மறுநாள் ஆத்மா சாப்பாட்டுக்குப் பிறகு எங்கேயோ அஞ்ஞாத வாசம் புரிந்து விட்டுச் சரியாகப் பத்தரை மணிக்குப் பாலத்தின் படிகளில் காலை ஊன்றினான்.

“வந்து விட்டீர்களா! எங்கே இன்று காணோமே என்று பார்த்தேன்.”

“இன்றைக்குத் தீக்ஷிதர் கதை பிரமாதம். மகா மேதைகள் வாக்குன்னா அப்படித்தான் இருக்கும். அதிலும் அந்தக் கட்டத்தில்...... அதுதான்னா திரௌபதி......”

கதைக்குப் பிரசன்னமாகாத ஆத்மா நிலைமையைச் சமாளிக்க முடியாமல் குழறினான். திரௌபதியின் மானத்தைக் காப்பாற்றக் கண்ணன் வந்து அருள் செய்ததுபோல், பார்வதி இந்த இக்கட்டான நிலையில் குரலைக் கொடுத்து ஆத்மாவின் ‘கதா ஞான’த்தைக் காப்பாற்றினாள்! பாலத்து நடை உண்டானால் கதை நடைபெறும் மண்டபத்துக்குச் செல்ல வேண்டிய அவசியத்தை அப்போதே உணர்ந்து கொண்டான், ஆத்மா.

பாலம் நேற்றுப்போல் ஏகாந்தமாக இருக்கவில்லை. ‘ஸ்பர்பன்’ பிரதேசத்துக்குப் போகிற பக்தர்கள் கூட்டமும் இருந்தது. அவர்களில் யாரோ ஒருவருடன் பத்தடிப் பின் தங்கிப் பேசிக்கொண்டே வந்தார் கிழவர்.

ஆத்மாவும் பார்வதியும் பி. பி. மாதுங்கா ‘லெவல் கிராஸை’த் தாண்டிவிட்டனர். பெரியவர் பேச்சை முடித்துக் கொண்டு நுழைய முற்பட்டபோது பாதசாரிகளுக்கான சிறு கதவைக் கூட சாத்திவிட்டான். கிழவருக்கும் அவர்களுக்கும் இடையே ரயில்வே கேட்; நேரத்தை நீட்ட ‘குட்ஸ்’ வண்டிப் பிரவேசம்!

“ஏன் ஸார், அர்ஜுன சந்நியாசி. நீங்கள் இன்னிக்குக் கதைக்கு வராமலே வேஷம் போடுகிறீர்களே!” — பார்வதியின் கேள்வி.

“உங்களுக்கு எப்படித் தெரியும்!”

"ஞான திருஷ்டி வேண்டுமோ! துரியோதனன் பாண்டவர்களைத் தேடினமாதிரி மண்டபம் பூராவும் நன்றாகத் தேடினேன். உங்களைக் காண வில்லையே!"

ஆத்மாவுக்கு உடம்பெல்லாம் புல்லரிப்பு. அவனது கண்களையே கூர்ந்து நோக்கினான்.

"நாளைக்குச் சுபத்திரா கல்யாணம். வருவேளா?" என்று கேட்டாள் பார்வதி.

"இந்த அர்ஜுனன் இல்லாத கல்யாணமா!"

குட்ஸ் வண்டியின் படபடப்பு மங்கி ஓய்ந்து விட்டது. கைத்தடியின் சத்தமும், பெரியவரின் முனமுணுப்பும் அருகே நெருங்கின.

* * *

மறுநாள் இரவு எட்டேகால் மணிக்கே பஜனை சபையின் மண்டபத்தில் ஆத்மாவின் தலையைக் கண்ட கிருஷ்ணன் திகைத்தான்.

"இங்கே எங்கேடா வழி தவறி வந்தாய்!"

"வழி தவறவில்லை சுவாமி. போகிற வழிக்குப் புண்யவதியைத் தேடி வந்த செய்கைதான் இது," என்றான்.

"என்னடா புதிர்! நீ ஆத்மாவா! அல்லது அவனது ஆவியா!"

"அட, பாவி! அதுக்குள்ளே ஏண்டா என்னைச் சாக அடிக்கிறே!" பேச்சினிடையே 'தேவி'யைத் தேடின அவனது கண்கள்.

பம்பாயில் வந்து குடியேறிய தென்னிந்தியர்களின் ஆஸ்திக ஒளியின் புறச் சின்னமாய்த் தோன்றிய அம் மண்டபத்தில் ஓரே ஜனக் கூட்டம். 'சத்' விஷயங்களுக்குச் செவி சாய்க்கக் கல்யாண், அந்தேரி என்று தொலை தூரத்திலிருந்து சிரத்தையுடன் வந்திருந்தனர் எத்தனையோ பேர்கள். தனது பட்டுப்புடவையை விளம்பரப் படுத்தவும், அரட்டை அடிக்கவும், சற்றுக் கதையைக் கேட்கவும் வரும் பெண்டிர் குழாம்; மண்டபத்தின் வடக்குச் சாரியை விட்டு விட்டுப் பெண்கள் பகுதிக்கு அடுத்த சுவரில் சாய்ந்து கொண்டு பாகவதருக்குக் காதும், ஸ்திரீகள் கூட்டத்திற் கண்ணும் பதிக்கும் ரஸிகர்கள் கோஷ்டி; சால்வைக்குள் புகுந்து கொண்டு சலனமின்றி இரண்டரை மணி நேரம் கணீரென்று கதை சொல்லும் தீக்ஷிதர்; அழகியதாம் தூணருகே முத்துச் சுடர் போலக் கமழும் இரு விழிகள்!

இவற்றிடையே மகாபாரதம் சொல்லிலே விரிந்து பரந்தது. சுருதியுடன் கூடிய சங்கீதம் போல் கனாதத்துடன் இழைந்து காற்றின் அணுக்களில் கரைந்து காதில் இன்பம் பயக்குவித்த தீக்ஷிதரின் குரல். நடுவே அவரது சொந்தத் தம்பட்டம்; புஸ்தகப் பிரசாரம்; உப கதைகள்; நாஸ்திகத்துக்கு அடிக்கடி சூடு!

இறுதியில் 'கோவிந்த நாம சங்கீர்த்தனத்'தின் எதிரொலி கேட்கு முன்பே 'துணைகள் சிற்றுமிட'த்தில் பெரியவரைக் கண்டு கொண்டான். அவர் அருகே வட்டக் கருவிழிகள்.

ரயில்வே இன்ஜினியர்கள் கணக்கிலே பாலம் நீண்டதாக இருந்த போதிலும் ஆத்மாதன் பார்வதியின் துணையாகச் செல்லும்போது, பேச்சு சுவாரஸ்யத்தில் அதன் நீளம் மிகக் குறைவாகவே பட்டது. பாலத்துக்குக் கீழே, தொழிற்சாலையிலிருந்து கிளம்பும் மூக்கைத் துளைக்கும் 'ஆக்ஸி-அஸிட்லின்' புகைகூட அவனுக்குக் குதூகலத்தையே அளித்தது.

## நடன அரங்கேற்றம்

○✻○

கலைகளிலே நடனம் நளினமான கலை. நம் தெய்வத் தமிழ் நாட்டின் பண்பாட்டையே சித்திரித்துக்காட்டும் சிறந்த கலை. தமது அருமையான வாசனைத் திரவியங்களினும் மணம் வீசித்திகழும் திரு டி. எஸ். ஆர். அவர்களின் பேத்தி மாலா இவ்வரிய கலைச் செல்வத்தைப் பயின்று, தேர்ச்சி பெற்றுக் கலைமணம் வீசித் திகழ்வதில் வியப்பில்லை.

பேபி மாலாவின் நாட்டிய அரங்கேற்றம் கும்பகோணம் ராஜகோபால் செட்டியார் தியேட்டரில் ஏப்ரல் மாதம் 2-ந் தேதி வெகு விமரிசையாக நடந்தேறியது. இந்த அரங்கேற்ற வைபவத்துக்குத் தஞ்சாவூர் ஜில்லா மாஜிஸ்திரேட் திரு சிவ சுப்ரமணிய நாடார் தலைமை தாங்கிச் சிறப்பித்தார். நாட்டியமாடிய சிறுமி மாலாவின் திறமையைச் சங்கீத கலாநிதி திரு ராஜமாணிக்கம் பிள்ளை, திரு டி. எஸ். சுவாமிநாத உடையார், திரு எஸ். ஆரோக்கியசாமி முதலியோர் பாராட்டிப் பேசினார்கள்.



ஒரு மண்டலத்தில் ஆத்மநாதன் - பார்வதி தொடர்பு வெகுவாக வளர்ந்து விட்டது. ஆனால் நெடுங்கதை என்று கருதப்படுகின்ற பாரதம் இவ்வளவு விரைவில் முடிந்து விடுமென்று இருவரும் எதிர்பார்க்க வில்லை! மூக்காணிபுரம் தீக்ஷிதர் இன்னும் இருமாதங்கள் கதையை வளர்த்தித் தனது பாலத்து யாத்திரையையும் வழித்துணையையும் வாழ்க்கை முழுவதும் நீளச்செய்ய வேண்டும் என்பது ஆத்மாவின் ஆத்மார்த்திகப் பிரார்த்தனை.

இடையே ஒருநாள் பெரியவருக்கு உடம்பு சரியின்றி வழுக்கைத் தலை 'மப்ளருக்'குள் பதுங்கிக் கொண்டது. ஆத்மாவைக் கூப்பிட்டு அனுப்பி, "பாதிக் கதையில் விடக் கூடாது. கல்யாணத்துடன் நின்று கொண்டாலும் பரவாயில்லை. சிரமத்தைப் பார்க்காமல் துணையாக வந்து பார்வதியை அகத்து வாசலில் கொண்டு விட்டு விடுங்கள்" என்றார். கிழவரின் நம்பிக்கைக்கும் மதிப்புக்கும் தான் ஆளானது பற்றி ஆத்மாவுக்குப் பெருமையாகவே இருந்தது.

அந்த இரண்டு நாட்களில் அந்த ஜோடி பேசித் தீர்த்த விஷயங்கள் அனந்தம்; முடிவு கட்டிய விஷயம் ஒன்றே ஒன்று!

"ஆச்சு, அடுத்த வாரம் கீதா உபதேசமாகிப் பாரதம் முடிந்து விடும். இந்தப் பாலத்து நடையும் நின்று விடும்!" என்றான் ஆத்மா.

"யார் சொன்னது! பொது ஜனங்களின் வேண்டுகோளுக்கு இணங்கத் தீக்ஷிதர் ராமாயணம் சொல்லப் போகிறாராம்!" என்றாள் பார்வதி.

"பேஷ்! அவருடைய மேதைக்குப் பொன்னாடை போர்த்தினாலும் தகும்!"

"பிரவசனம் சொல்கிற வரைவிட, இந்தக் குளிரில் வந்து செல்பவர்களுக்குச் சிரத்தையைப் பாராட்டி யாராவது போர்வை தானம் செய்தால் பொருத்தமாக இருக்கும். குளிராவது குறையும்" என்றாள் குறும்பாக.

"உன் அப்பாவிடம் சொன்னால் செய்கிறார்."

"போர்வை தானமா!"

"கன்னிகா தானம்!"

அவள் எழில் வதனம் செம்மை பூத்ததின் காரணம் ரயில்வே 'கேட்'டின் சிவப்பு ஒளியா, இயற்கையான நாணமா என்பது அப்பொழுது தெரியவில்லை.

தை பிறந்தது.

புத்திசாலியான பார்வதி எவ்வாறோ விஷயத்தைத் தனது தகப்பனாரிடம் பிரஸ்தாபித்த போது, மகிழ்ச்சியால் பெரியவர் கண்களும் வழுக்கைத் தலையும் பிரகாசித்தன. அதற்குப் பிறகு காரியங்கள் விருவிருப்புடன் நடைபெற்று, நல்ல நாளில் நிச்சயதார்த்த ஏற்பாடும் நிகழ்ந்தது. அதற்கு முத்துஸ்வாமி தீக்ஷிதரே வந்து ஆசிகள் வழங்கிய போது, ஆத்மாவால் அவரது உபந்யாசத்தைப் பாராட்டாமலிருக்க முடியவில்லை.

சீதா கல்யாணப் பிரசங்கம்!

மூக்காணிபுரம் மேல் ஸ்தாயியில் பேசிக் கொண்டே சென்றார்: "நான் போய்க் கதை சொல்ற இடங்களிலே மழை இல்லாட்டா மழை 'பெய்யறதைப் பார்த்திருக்கேன். பம்பாயிலே கதை கேட்டுக் கல்யாணமும் நிச்சயமாகிறது. கதை கேட்டா வீண் போகாது. கை மேற் பலனுண்டு......"

'தீக்ஷிதர் வார்த்தை பலித்து விட்டது. ஆத்மா கதைக்கு வந்ததில் கைமேற் பலன் கிடைத்து விட்டதற்கு அவன் கைகளில் காட்சி அளிக்கும் கறிகாய்ப் பையே சாட்சி. மேற்படி தம்பதி பாலத்தைக் கடக்கும் போது பார்வதி டம்பப் பையுடனும், மாதுங்கா மார்க்கெட்டில் வாங்கிய கறிகாய்ப் பாரத்துடன் ஆத்மாவும் காட்சி அளிப்பது சகஜமான நிகழ்ச்சிகளில் ஒன்று.

இப்போதெல்லாம் ஆத்மா தீக்ஷிதர் கதைகளைப் பழிப்பதில்லை; அதற்குப் பதில் பக்தி சிரத்தையுடன் அதைக் கேட்பதுடன் வானளாவப் புகழ்ந்து வருகிறான். ஆனால் ஜால்ரா கிருஷ்ணன் மட்டும் ஆத்மாவின் அதிர்ஷ்டத்துக்குப் பொருமிக் கொண்டே இருக்கிறான் என்று மாதுங்கா வாசிகள் சொல்லக் கேள்வி.



பாட்டுக் கொரு புலவன்
பாரதி

# தமிழ் வளர்த்த



கவி நாயகம்
'தே. வி'



முத்தமிழ் முனிவர்
டி. கே. சி.

# பெரியார்கள்



இலங்கை தந்த
இன் தமிழ் நாவலர்



தமிழ்த் தாத்தா



ஆராய்ச்சி மன்னர்
வையாபுரிப்பிள்ளை



யாழ் நூல் கண்ட
விபுலானந்தர்



தனித் தமிழ் கண்ட
மறைமலையடிகள்



வீரத் தமிழ் வளர்த்த
திரு.வி.க.



நாளும் தமிழ் வளர்த்த
பேராசிரியர் கல்கி

மணியம்

கல்கியின்

# அமர தாரா

அத்தியாயம் 9

## புத்துயிர்

எனக்கு மனம் படபடவென்று பட்டுப் பூச்சியின் சிறகுகளைப் போல் அடித்துக் கொண்டது. பத்மநாபனை நான் பார்த்தேன். அவருக்கு முகம் கறுத்து, என்னவோ மாதிரி இருந்தது. இந்துவின் பெயரைக் கேட்டாலே இவருக்குப் பிடிக்கவில்லையே என்று எண்ணமிட்டேன்.

கைலாசனுவைப் பார்த்து, "உனக்கு ஏதாவது வேலை இருந்தால் போய்ப் பார். நான் இவருடன் முக்கியமான விஷயங்கள் பேச வேண்டும்" என்று கூறினார் பத்மநாபன்.

நான் கைலாவைப் பார்த்து, "எங்கே அந்தப் பத்திரிகையைக் காட்டுங்கள்" என்றேன். அவள் அதை எடுத்துக் கொண்டு போய்விட்டால் என்ன செய்வ தென்று எனக்குப் பயம்.

ஆனால் பத்மநாபன் அதற்கு என்னை விடவில்லை. "என்ன மிஸ்டர் ராய்? நீங்கள் கூட இந்தக் குப்பைகளை யெல்லாம் பார்ப்பதுண்டா? இவர்கள் தான் நான் சொல்வதைக் கேட்பதே இல்லை. கண்ட பத்திரிகைகளை யெல்லாம் வாங்கு வது, வேண்டாத விஷயங்களை யெல்லாம் படிப்பது இவர்களது வழக்கம். ரொம்ப மட்டம்" என்றார்.

கைலாசனுவுக்கு ரொம்பக் கோபம் வந்து விட்டது. "இப்போது திடீரென்று இதில் என்ன மட்டம் வந்து விட்டது? சினிமாவில் நடிப்பவர்கள் மட்டும் மனிதர்கள் இல்லையா? அவர்களுக்கு இதயம் இல்லையா? எனக்கு இதில் ஒன்றும் மட்டமாகப் படவில்லை" என்றாள் படபடவென்று.



ரமேஷ் குறுக்கிட்டு, "என்ன கைலா! ஏன் இப்படிப் பொரிகிறாய்? அப்பா அவருடன் ஏதோ முக்கியமாகப் பேசிக் கொண்டிருக்கிறார். நாம் அங்கே போய் உட்கார்ந்து பேசுவோம் வா!" என்றான்.

கைலா ஆத்திரத்துடன் புத்தகத்தைக் கையில் எடுத்துக் கொண்டு அவனுடன் எழுந்து சென்றாள். அவர்கள் இருவரும் கொஞ்ச தூரத்துக்கப்பால் சென்று புல் தரையில் உட்கார்ந்து ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள்.

பத்மநாபன் என்னைப் பார்த்து, "மிஸ்டர், ராய். நீங்கள் இன்னும் நான் கேட்ட விஷயத்தைப் பற்றி ஒரு முடிவுக்கு வரவில்லையா?" என்று கேட்டார்.

"நான்தான் என் முடிவை அப்போதே தெரிவித்து விட்டேனே."

ஆனந்தி

"அது உறுதியானதுதானா? மாற்றவே இடம் இல்லையா?"

"மாறுதல் ஏற்படுவதற்கே இடமில்லை. அது மட்டும் சர்வநிச்சயம்."

"அந்தப் பெண்ணை ......"

"தயவு செய்து அதைப் பற்றி மாத்திரம் பேச வேண்டாம்."

பத்மநாபன் ரொம்பக் கெட்டிக்காரர். உடனே பேச்சை மாற்றினார். கொஞ்சங்கூட நான் கூறியது அவரைப் பாதித்ததாகக் காட்டிக் கொள்ளவில்லை.

"நான் நாளை சென்னைக்குப் போகிறேன், மிஸ்டர் ராய். அங்கே எனக்கு ஒரு முக்கியமான வேலை இருக்கிறது. நான் வரும் வரையில் இங்கே எல்லோரையும் நீங்கள் தான் கவனித்துக் கொள்ள வேண்டும்" என்றார்.



"அதற்கென்ன பேஷாய்க் கவனித்துக் கொள்கிறேன்." நான் அவருடன் பேசிக் கொண்டிருந்தேனே தவிர என் மனம் ரமேஷும் சுலோசனாவும் இருந்த இடத்திலேயே இருந்தது. அவர்கள் என்ன பேசுகிறார்களென்று கேட்க ஆவலாக இருந்தது. சினிமா நடிகை அமரதாராவின் படத்தைப் பார்த்து எப்படியாவது நிச்சயம் செய்து கொள்ள வேண்டுமென்று துடித்தேன்.

பத்மநாபனோ பேசிக் கொண்டே இருந்தார். விடவே இல்லை. எனக்குப் பத்மநாபன் எதிரில் அதைப் பார்க்க நான் ஆவலாக இருப்பதாகக் காட்டிக் கொள்ள விருப்பமில்லை. பத்மநாபன் என்னை விட்டு நகராமல் போகவே, புறப்பட வேண்டியதாயிற்று.

நான் எழுந்தேன். சுலோசனாவும் ரமேஷும் இருந்த இடத்துக்கருகில் நான் சென்றபோது, "இது அவள் தான். எனக்குச் சந்தேகமே இல்லை" என்று சுலோ கூறியது காதில் விழுந்தது.

"ஏதாவது உளறாதே சுலோ! அவள் இல்லவே இல்லை. அவள் மாதிரி இருக்கிறதென்று ஒப்புக் கொள்கிறேன். நிச்சயமாக அவளில்லை. நீ எதற்கு இதையெல்லாம் போட்டு மூளையைக் குழப்பிக் கொள்கிறாய்? அப்பாவுக்கும் பிடிக்காது, விட்டுவிடேன்" என்றான் ரமேஷ்.

நான் அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு கிளம்பினேன். சுலோசனாவிடம் பேசும்போது அந்தப் பத்திரிகையின் பெயர் என்ன என்று பார்க்க முயற்சித்தேன். இருள் நன்றாகச் சூழ்ந்து விட்டதால் அது முடியவில்லை. அன்று வீட்டுக்குப் போகும் வழியில் ஒரு புத்தகக் கடையில் நுழைந்து, சமீபத்தில் வெளி வந்திருந்த சினிமாப் பத்திரிகைகள் அனைத்தையும் வாங்கிக் கொண்டு போனேன். போய்ச் சேர்ந்ததும், ஒவ்வொரு புத்தகமாக எடுத்துப் பக்கம் பக்கமாகப் புரட்டினேன். ஒன்றிலாவது அமரதாராவின் படத்தைக் காணவில்லை.

எனக்கு ஒரே ஏமாற்றமாகப் போய் விட்டது. சுலோசனா பார்த்தது வேறு எந்தப்பத்திரிகையோ? ஒரு வேளை இரண்டு மூன்று வாரங்களுக்கு முந்திய பத்திரிகையாக இருக்கும். நாளை சுலோசனாவை விசாரிக்கலாம் என்று மனத்தில் தீர்மானித்துக் கொண்டேன்.

சுலோவை அந்தப் பத்திரிகையைப் பற்றிக் கேட்ட போது, "எதற்காக அதைப் பற்றிக்கேட்கிறீர்கள்?" என்று வினவினாள்.

"சாதாரணமாகத்தான்."

"அப்பா நேற்று நீங்கள் சென்ற பிறகு ஒரே கோபமாக இருந்தார். எங்களுக்கெல்லாம் நல்ல வசவு கிடைத்தது. நாங்கள் உங்கள் முன்னிலையில் ரொம்பக் கேவலமாக நடந்து கொள்கிறோமாம். சினிமாப் பத்திரிகைகளே இனி இந்த வீட்டிலிருக்கக் கூடாது என்று கூறி எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு போனார். அவருக்குக் கோபம் வந்து விட்டால் எல்லோருக்கும் ஒடுங்கிப் போய்விடுகிறது" என்றாள். சுலோவிடம் அதற்கு மேல் அந்த நடிகையைப் பற்றிக் கேட்க எனக்குத் தயக்கமாக இருந்தது. என்னைப்பற்றி அவள் தெரிந்து கொள்வதை நான் விரும்பவில்லை. வீடு சென்றதும் எல்லா சினிமாப் பத்திரிகைகளுக்கும் சந்தாத் தொகை அனுப்பி வைத்தேன்.

அமரதாரா நடித்த படம் ஏதாவது ஒன்று கல்கத்தா நகரில் திரையிட மாட்டார்களா என்று ஏங்கினேன். நான் சந்தா கட்டிய பத்திரிகைகளிலெல்லாம் அமரதாராவைப் பற்றி ஏதேனும் குறிப்புக்கள் வந்து கொண்டுதான் இருந்தன. ஆனால் அவற்றைக் கொண்டு இந்துமதிதான் அமரதாராவா என்பதை நான் எப்படி நிச்சயிப்பது? இந்துவின் பெயர் என் இதயம் முழுவதையும் நிறைத்துக்

கொண்டிருந்தது போய் இப்போது அமரதாரா அதில் சம இடம் பெற்று விட்டாள். எனக்கே இது சில சமயங்களில் அவமானமாகவும் வருத்தமாகவும் இருக்கும். "யாரையோ பற்றி எப்போதும் சிந்தனை செய்துகொண்டிருக்கிறோமே? அது இந்துவாக இல்லாவிட்டால் எத்தனை ரஸக் குறைவாகப் போய் விடும்?" என்று நினைப்பேன்.

அமரதாராவின் படம் ஒன்று கிடைக்குமா வென்று கல்கத்தா நகர் முழுவதையும் சுற்றி வந்தேன். ஒரு சினிமா தியேட்டர் முதலாளியிடம், "நடிகை அமரதாராவின் படம் ஏதாவது இருக்கிறதா?" என்று கேட்டேன்.

"எதற்காக? நீங்கள் அவளுடைய விசிறியோ?" என்று கேட்டார் அவர்.

"அதைப்பற்றி உங்களுக்கென்ன? படம் இருக்கிறதா? காட்ட முடியுமா?" என்று கேட்டேன்.

"எனக்கொன்றும் இல்லை, ஸார்! படம் இல்லை அவ்வளவுதான்" என்றார். மனம் ரொம்ப நொந்து திரும்பினேன்.

அமரதாரா நடித்த ஒரு படத்தின் விளம்பரத்தைப் பார்த்துப் பார்த்து விட்டு நான் அவள் நடித்த ஸ்டுடியோவுக்குக் கடிதம் எழுதினேன். அவளுடைய போட்டோவை அனுப்பி வைக்கும்படி கேட்டிருந்தேன்.



பதில் சீக்கிரத்தில் வந்தது. அதில் அமரதாராவின் படம் கைவசமில்லை என்றும், அவளுடைய உண்மைப் பெயர் விமலா என்றும், அவளுடைய தகப்பனார் பெயர் முனிசாமி கவுண்டர் என்றும் எழுதப்பட்டிருந்தது. எனக்கு அதன் பிறகு நெஞ்சம் ரொம்பச் சோர்ந்து விட்டது. அமரதாரா இந்துமதி இல்லை போலிருக்கிறதே என்று நொந்து போனேன். நான் பட்ட பிரயத்தனங்கள் வீண் என்று அறிந்து வருத்தமடைந்தேன்.

இரண்டு வாரங்கள் இப்படியெல்லாம் தனித்த பிறகு ஒரு பத்திரிகையில் தற்செயலாக அமரதாரா என்னும் நட்சத்திரம் வீடு வாங்கியிருக்கிறாள், அது இந்துமதி என்னும் பெயரில் பதிவாகி இருக்கிறது என்று படித்தேன். எனக்கு உடனே அது இந்துதான் என்று நிச்சயமாகத் தெரிந்து விட்டது. அதை ஊர்ஜிதம் செய்து கொள்ள ஒரு போட்டோவைப் பார்த்து விட்டால் போதும். குலோசனிடமே பேச்சுக் கொடுத்துப் பார்த்தால் என்ன என்று தோன்றியது. உடனே காரை எடுத்துக் கொண்டு குலோசனைத் தேடி அவன் வீட்டுக்குச் சென்றேன்.

நான் சென்ற போது குலோசன் தோட்டத்தில் இருந்த செடிகளுக்குத் தானே பூவாளியால் தண்ணீர் விட்டுக் கொண்டிருந்தான்.

"இது என்ன அதிசயமாக இருக்கிறது? காரியாலயத்திலிருந்து வந்ததும் வராததுமாகத் தோட்ட வேலை செய்கிறீர்கள்? பூச் செடிகள் என்ன புண்ணியம் செய்தனவோ?" என்றேன்.

குலோசனும் சிரித்துக் கொண்டே, "எனக்குத் திடீரென்று ரோஜாச் செடிகளை வைக்க வேண்டுமென்று ஆசையாக இருந்தது. அதனால்தான் இங்கே இருந்த 'ஆஸ்டர்' செடிகளையெல்லாம் எடுத்து வேறு இடத்தில் வைத்து விட்டு இங்கே ரோஜாச் செடிகள் வாங்கிக் கொண்டு வந்து வைத்தேன்."

நான் பேராசிரியர் ஆன்ட்ரூஸ் வீட்டில் ரோஜாச் செடிகள் இருந்ததைப் பற்றிச் சொன்னதுதான் குலோசனின் புதிய சிரத்தைக்குக் காரணம் என்று எனக்குத் தெரிந்து விட்டது. ஐயோ! வெளிப்படையாகச் சொல்லித் தொலைக்கக் கூடாதா? ஆனால் பத்மநாபன் நான் மறுத்து விட்டதைப் பற்றிச் சொல்லாமலா இருப்பார்? அப்படியிருந்தும், குலோசன் ஏன் இப்படியெல்லாம் செய்கிறான்? இது புரியாத புதிராக இருந்தது. நான் நினைப்பதற்கு ஆதாரமாக அவன் வாயைத்திறந்து ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை. எப்போதும் விளையாட்டாகவேதான் என்னிடம் பேசினான்.

"என்ன? என்ன? இப்படி நீங்கள் தவம் செய்ய ஆரம்பித்து விட்டீர்கள்?" என்று கேட்டான் குலோ.

"தவம் ஒன்றுமில்லை. ரோஜாச் செடிகள் என்றதும் எனக்கு இங்கிலாந்திலுள்ள எனது பேராசிரியர் ஆன்ட்ரூஸின் வீட்டு ஞாபகம் வந்தது."

"அவர்கள் வீட்டுத் தோட்டம் மாதிரியே இருக்க வேண்டுமென்றுதான் நான் இவைகளை வாங்கிக்கொண்டுவந்தேன்."

"நான் செடிகளின் அருகில் சென்று, "இந்தச் செடிகளைப் பற்றியும், அவை

நிறையப் புஷ்பிப்பதற்கு என்ன செய்ய வேண்டுமென்பது பற்றியும் உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டேன்.

''இதுவரை தெரியாது. 'ரோஜாச் செடிகள் பயிரிடுவதெப்படி?' என்று ஒரு புத்தகம் வாங்கிப் படித்தேன். அதன் பிறகு கொஞ்சம் தெரியும்.''

''எல்லாவற்றையும் பற்றிப் புத்தகத்தில் படித்தே தெரிந்து கொண்டு விடுவீர்கள் போலிருக்கிறதே. அனுபவத்தின் மூலம் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் உங்களுக்கு இல்லை போலிருக்கிறது!'' என்றேன் பலமாகச் சிரித்துக் கொண்டே.

''ஆமாம்! எத்தனையோ முக்கியமான விஷயங்களைப் பற்றி நான் புத்தகத்தில் படித்திருக்கிறேன். ஆனால் அவற்றை அனுபவித்து அறிய எனக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை'' என்று கூறி விட்டுத் தண்ணீர் வாளியைக் கொண்டு வைத்து விட்டு வந்தாள் சுலோசனா.

நாங்கள் உள்ளே சென்று உட்கார்ந்தோம். ''ரமேஷ் எங்கே? வெளியில் போயிருக்கிறாரா?'' என்று கேட்டேன்.

''இன்னும் ஆபீஸிலிருந்தே வரவில்லை'' என்றாள்.

''நாம் ஏதேனும் சினிமாவுக்குப் போகலாமென்று எண்ணினேன். இன்னும் ரமேஷ் வரவில்லையே. படம் ஆரம்பிக்கும் நேரமாகி விட்டதே?''

''அவன் வராவிட்டால் என்ன? நான் அம்மாவிடம் சொல்லிவிட்டு வருகிறேன். நாம் இருவரும் போவோம். மீராவை அழைத்துக் கொண்டு போவோம். அவளுக்கு இன்று பிறந்த நாள்.''

''அப்படியா? எனக்குத் தெரியாமல் போய் விட்டதே. சரி! சீக்கிரம் வரச் சொல்லுங்கள். போகும் போது நாம் எல்லோரும் 'ஐஸ் க்ரீம்' சாப்பிட்டு விட்டுப் போகலாம்'' என்றேன்.

காரில் மீராவும், சுலோசனாவும் ஏறிக் கொண்டார்கள். ''பானுவையும் நம்முடன் அழைத்துப் போவோமே?'' என்றேன்.

''இல்லை. அம்மா அவனுக்கு உடம்புக்கு ஆகாது என்கிறாள். நாளைக்கு வேறு எங்கேயாவது அழைத்துப் போகலாம். சினிமாவுக்கு வேண்டாம்.''

''அப்படியானால் சரி!'' என்று கூறி விட்டு நான் காரை 'ஸ்டார்ட்' பண்ணினேன்.

கொஞ்ச தூரம் சென்ற பிறகு, ''ஏதாவது தமிழ்ப் படம் நகரில் ஓடுகிறதா? நான் இங்கிலாந்திலிருந்து திரும்பிய பிறகு ஒரு தமிழ்ப் பாம் கூட இன்னும் பார்க்கவில்லை'' என்றேன்.

''தமிழ்ப் படமா? இப்போது ஒன்றும் நல்ல படம் ஓடவில்லை. இன்னும் இரண்டு நாட்களுக்குப் பிறகு ஒரு நல்ல படம் வருகிறதாம். அதற்கு வேண்டுமானால் போகலாம். அதை எல்லாரும் ரொம்பப் புகழ்ந்து எழுதியிருக்கிறார்கள்.''

''அப்படி என்ன அதிசயமான படம் வருகிறது?''

''அமரதாரா என்ற மிகப் பிரபலமான நடிகை நடித்த படமாம். அவள் நடித்த படம் எதை









யும் இதுவரை நான் பார்த்ததில்லை. இந்தப் படத்துக்குக் கதையையும் அவளே எழுதியிருக்கிறாளாம். ரொம்ப நன்றாக இருக்கிறதென்று விமரிசனங்கள் எல்லாம் ஒருமுகமாகப் புகழ்ந்திருக்கின்றன."

எனக்கு இதயம் விரிந்து விசாலமாகி விட்டது போலிருந்தது. கை சற்று நடுங்கிற்று. எதிரே வெகு வேகமாக வந்த டாக்ஸியின் மேல் மோதி விடாமல் திருப்ப மிகவும் சிரமப் பட்டேன்.

"இன்று என்ன உங்களுக்கு? நீங்கள் கூட இவ்வளவு அஜாக்கிரதையாகக் கார் ஓட்டுகிறீர்களே?" என்றாள் சுலோ.

அன்று படத்துக்குப் போய்விட்டு வந்தது முதல் எனக்கு நிலை கொள்ளவேயில்லை. அமரதாரா நடிக்கும் படம் வரும் நாளை வெகு ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

படம் வெளியாகும் தினத்தன்று முதலிலேயே இடத்துக்கு 'ரிஸர்வ்' செய்துவிட்டு, சுலோசனாவின் வீட்டுக்குக் கிளம்பிச் சென்றேன். ரமேஷும் சுலோவும் என்னுடன் வந்தார்கள்.

நாங்கள் உள்ளே சென்று அமர்ந்தோம். விளக்குகள் அணைந்தன.

என்னால் நாற்காலியில் உட்கார்ந்திருக்கவே முடியவில்லை. முதலில் வந்த செய்திப் படங்கள் எதிலும் மனம் ஈடுபடவே இல்லை. இவை எப்போது முடியும் என்று காத்துக் கொண்டே இருந்தேன். கடைசியில், "சினிமா வானில் சுடர் விட்டுப் பிரகாசிக்கும் 'அமரதாரா' நடித்த" என்று திரையில் நட்சத்திரங்கள் ஜ்வலிக்க ஆரம்பித்தன. என் நெஞ்சம் விம்மித் தணிந்தது.

அதில் முதல் காட்சி. ஒரு ஸர்க்கஸ் நடந்து கொண்டிருக்கிறது. ஒரு வாலிபன் வித்தைகள் செய்கிறான். இது எனக்குத் தலை வேதனை யளித்தது. அவன் கரணம் போடும் போது கை தவறுகிறது. அதே சமயத்தில் "ஐயோ!" என்று ஒரு பெண் அலறும் சத்தம் கேட்கிறது. அந்த இளம் பெண்ணின் முகம் திரையில் தெரிந்தது.

நான் நாற்காலியை இரண்டு கைகளாலும் அழுத்திப் பிடித்துக் கொண்டேன். "இந்து" என்று கூப்பிட்டு விட வேண்டும் போலிருந்தது. அப்போது நான் அடைந்தது ஆனந்தமா? துயரமா? என்னவென்று சொல்ல முடியாது. இரண்டையும் கடந்த ஒரு நிலை என்று தான் கூற வேண்டும்.

படம் முழுவதையும் பார்த்த பிறகு இந்துவிடம் எனக்கு மரியாதை உண்டாயிற்று. அதுவரையிருந்த பரிதாப உணர்ச்சிக்கும், அன்பு உணர்ச்சிக்கும் மேலாக இந்த மரியாதை உணர்ச்சி தோன்றியது. அந்த நிமிடம் வரையில் நான் அவளைச் சிறு குழந்தையைப் போல் நேசித்துக் கொண்டிருந்தேன். படத்தைப் பார்த்த பின் ஒரு திறமை மிகுந்த மங்கையாக அவளை நினைக்கத் தொடங்கினேன். பரிவு உணர்ச்சியுடன் அளவிலாத வியப்பு உண்டாயிற்று. ஒன்றுமறியாத சிறுமியாக இருந்த இந்துமதி ஐந்து வருஷங்களுக்குள் எவ்வளவு விஷயங்கள் தெரிந்து கொண்டு விட்டாள். இதயத்திலுள்ள ஏக்கம், அன்பு, துயரம், கசப்பு, ஆத்திரம், பயம் முதலிய நுட்பமான உணர்ச்சிகளைக் கண்களினாலும், புருவத்தின் அசைவுகளினாலும் எவ்வளவு எளிதாக வெளியில் காட்டி விடுகிறாள். உடலை அலட்டிக் கொள்ளாமல் முகத்திலேயே சகல உணர்ச்சிகளையும் பொழிகிறாளே! இந்தத் திறமை அவளுக்கு எங்கிருந்து வந்தது?

அடேயப்பா! ஒருவரைப் பற்றி முழுவதும் அறிந்து கொள்வதென்பது எவ்வளவு கடினமான விஷயம்? நான் இங்கேயே இருந்து அவளை மணந்து கொண்டிருந்தால் அவளுடைய திறமை இப்படிப் பிரகாசிக்க இடமே இல்லாமல் போயிருக்கும். ஒரு வேளை இப்படி யெல்லாம் நடக்க வேண்டுமென்றுதான் அவளுக்கு அவ்வளவு கஷ்டங்கள் ஏற்பட்டனவோ? இருக்கும். உலகத்தில் எதற்குத்தான் நம்மால் காரணம் கண்டு பிடிக்க முடிகிறது? (தொடரும்)

# ஹாஸ்யக் களஞ்சியம்


எப்படியோ, போன வருஷத்தை
ஒரு மாதிரி தள்ளி விட்டோம்.
இந்தப் புது வருஷத்தை
எப்படித் தள்ளப்
போகிறோமோ?


"ஏண்டா பசங்களா, பள்ளிக்கூடத்தில் சேர்த்து படிக்க உங்களுக்கு வயதாகவில்லையா?"
"இல்லையே! நாங்கள் முதியோர் கல்வியில் அல்லவா சேர்த்து படிக்கப் போகிறோம்!"


எதுக்காக அந்த போர்டை அவ்வளவு அவசரமாகக் கழட்டுகிறீர்கள்?
உங்கள் வரவு நல்வரவு
உன் பிறந்த வீட்டு மனுஷாளெல்லாரும் ஊரிலிருந்து இப்ப வரப்போகிறதாக நீதானே சொன்னே!
? ? ?


என்ன பாகவதரே; உங்களோடே கோடி பேரை அழைத்துக் கொண்டு வந்திருக்கிறீர்களே! இவர்களெல்லாம் யாரு?"
"இவர்களெல்லாம், என் சிஷ்ய கோடிகள்!"


வீட்டு நெறைப்பு:- எங்க அம்மா என்னைத் தேடினால் நான் முந்திரிப் பருப்பு டப்பாக்குள் இருக்கிறேன் என்று சொல்லு!


எலியை இங்கே எங்கேயும் விட்டு விடாதே திரும்பி வந்து விடும். அடுத்த ஊரில் கொண்டு விட்டுவிடு.

# ரகுபதி  ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

22

சத்தியம், உண்மை என்று சொல்லிக் கொண்டு அடக்கம் இல்லாமல் போனால், கர்வத்திலும் அகம்பாவத்திலுமே முடியும். அடக்கத்தோடு உண்மையைக் கடைப் பிடித்தால்தான் வாழ்க்கை அழகு பெறும். இல்லாவிடில் நல்ல சித்திரத்துக்கும் குறும்புக் கோணல் சித்திரத்துக்கும் உள்ள பேதத்தைப் போலவே ஆகும்.

உண்மையைக் கடைப் பிடித்து வாழ்க்கை நடத்துவது மிகக் கடினம். இது முயன்று பார்ப்பவர்களுக்கு நன்றாகத் தெரியும். சத்திய மார்க்கத்தில் முயல்கிறவன் வெற்றி பெறும் போது மக்கள் அவனைப் பாராட்டுகிறார்கள். தோல்வி அடைந்து தவறிய போது உலகத்துக்கு அது தெரிவதில்லை. ஆனால் அவனுக்கு நன்றாகத் தெரியும். தோல்வியைக் கண்ட மெய்த் தொண்டன் அந்தத் தோல்வியினால் தண்டனை அடைந்துசுத்த நிலை பெறுவான். அடக்கமும் பெறுவான்.



உயிர் கொண்ட ஜீவன்கள் அனைத்துக்கும் அன்பு செலுத்த வேண்டும் என்று விரும்பும் ஒருவன், 'உனக்கு நான் பகைவன்' என்று சொல்லிக் கொள்ளுகிறவனிடத்திலும் அன்பு செலுத்த விரும்புவான். இதை ஒருவன் தன் சக்தியைக் கொண்டே செய்ய முடியுமா? முடியாது. ஆண்டவனைப் பிரார்த்தித்துச் சக்தி அடைந்தால்தான் முடியும். தன்னை ஒரு தூசியாக நினைத்துப் பிரார்த்திக்க வேண்டும். அருள் மார்க்கத்தில் அடக்கம் தானாக வளரும். தன்னைத் தூசியாகப் பாவித்துக் கொண்டு சூன்யமாக ஆகி விட்டால்தான் ஆண்டவனை நேருக்கு நேர் காணமுடியும். இல்லாவிடில் ஆண்டவனை ஒருபோதும் காண இயலாது. 'வெற்றி பெற்றேன்' என்று யாரே தன்னைத்தான் பாராட்டிச் சொல்லிக் கொள்ள முடியும்? நமக்குள் கோயில் கொண்டிருக்கும் ஆண்டவன் அல்லவோ வெற்றி பெற்றது. நாமல்ல. சத்தியாக்ரக யுத்தத்தில் பொறுத்துக் கொள்ள வேண்டிய நஷ்டங்களைக் கண்டு சிலர் திகைக்கிறார்கள். ஆயுதங்கள் கொண்டு நடத்திய மகா யுத்தத்தில் வெற்றி பெறுவதற்குமுன் எத்தனை லட்சக்கணக்கில் மக்கள் மாண்டார்கள். அந்த யுத்தத்தை விடப் பெரியதல்லவா ஆன்ம யுத்தம். ஆன்ம சக்தியைக் கொண்டு நடத்தும் யுத்தத்தில் பல பேர் உயிர் இழப்பது என்ன வியப்பு? பலர் மாண்டால்தான் சத்தியத்துக்கு முழுச் சான்றாக ஒருவனாவது நிற்க முடியும்.

[யங் இந்தியா 25—6—25]

# எக்லா

## தென் இந்தியா விரும்பும் டால்க்!

### *தெம்பூட்ட, மணமளிக்க தனிப்பட்ட தயாரிப்பு*

இந்த பரத நாட்டியக்காரியைப்போல், நீங்களும் தென்னாட்டின் அதி உஷ்ண கால நிலையிலும்கூட குளுமையும் இதமும் பெறலாம். மனோரம்மிய மணம் பெற்ற எக்லா டால்க் உபயோகித்தால் குளுமையான நுண்ணிய சுகந்தத்திற்கு இந்த ஒப்புயர்வற்ற டால்க்கை அடிக்கடி தாராளமாக உபயோகியுங்கள்

*மெல்லிய எக்லா ஒரு லட்சிய முகப்பவுடரும் கூட*

கால்கேட்

# எக்லா

## டால்க் பவுடர்







# 'அனாஸின்'

## விஞ்ஞான முறையில்
## நான்கு மருந்துகளின்
## ஒரு கலப்பு.

'அனாஸின்' விஞ்ஞான முறைப்படி சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். அவை நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து விரைவில் வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, மற்றும் தசை நார்களில் தோன்றும் இவற்றை நீக்கும். அனாஸினில் அடங்கிய சில நான்கு மருந்துகள் —

1. கொயினா: ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. காப்பின்: பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் விதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. பினாஸிடின்: ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. ஆஸிடில் ஸாலிஸிலிக் ஆஸிட்: தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் போக்குவதற்கு மிகவும் உபயோகமுள்ளது.

அனாஸினிலுள்ள இந்த நான்கு மருந்துகளும் ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். 'அனாஸின்' ஹிருதயத்திற்கு தீங்கு விளைவிப்பதோ அல்லது வயிற்றுக்கு கோளாறுண்டாக்குவதோ கிடையாது. வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைகளில் வலி முதலியவற்றிலிருந்து விரைவிலும், பத்திரமாகவும், நிச்சயமாகவும் நிவாரணம் பெற எப்பொழுதும் அனாஸினையே கேட்டு வாங்குங்கள்.




**லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம அளிக்கின்றது.**

A 4½

போட்டிக் கதை




"யாரது, என் கண்ணைப் பொத்துவது! ஓ விஜயாள் தானு! சரி, சரி, கையை எடு!"

"கெட்டிக்காரிதான்! நான்தானென்று எப்படிக் கண்டு பிடித்தாய்!" என்று ஒரு குதி போட்டுச் சிரித்துக்கொண்டே விஜயாள் தன் சிநேகிதியின் முன் வந்து உட்கார்ந்தாள்.

"ஏன் தெரியாது! உன் கைவளைச் சத்தத்திலிருந்தும், உன் தலையில் தடவிக் கொண்டிருக்கும் தைலத்தின் வாசனையிலிருந்தும் நீதான் என்று தெரிந்து விட்டது. அது சரி; உன் கணவர் இன்னும் ஊரிலிருந்து வரவில்லையா, விஜயா! ஐயோ, பாவம்! நீயும் அவர் வருகைக்காக மூன்று நாட்களாய் ஏங்கிக் கொண்டிருக்கிறாய்! அவர் வந்துவிட்டால் உனக்கு இங்கே வர நேரமிருக்குமா!"

"உண்மைதான். நேற்று நீ பாதியில் நிறுத்தினையே, அந்தச் சேவலின் கதை, அதை முழுதும் கேட்கலாமென்றுதான் வந்தேன்."

"ஓஹோ, அப்படிச் சொல்லு. நான் சொன்னது கதையல்ல; உண்மையாகவே நடந்த சம்பவம்...சரி, நேற்று நான் என்ன சொன்னேன் அந்தச் சேவலைப் பற்றி!"

"நரிக்குறவர்கள் கூட்டமாக உங்கள் கிராமத்தின் எல்லையில், மலையோரமாகக் கூடாரம் போட்டிருந்தார்கள். பல இடங்களில் அவர்கள் கோழிகளைத் திருடி விட்டார்கள். ஒருநாள் சாமத்தில் உன் வீட்டுத் தோட்டத்துக்குள்ளும் ஒரு நரிக்குறவன் நுழைந்து விட்டான். உன் வீட்டுச் சேவல் அவன் மேலே பாய்ந்து அவன் உடம்பெல்லாம் கீறி விரட்டி விட்டது என்று சொன்னாய்......"

"உம்; இப்போது ஞாபகம் வந்து விட்டது. பிறகு திரும்பிவந்து எங்கள் வீட்டுக் கொல்லைக் கதவை 'டக், டக்' கென்று கொத்திச் சத்தப் படுத்தியது......"

"ஏதேது, ரொம்ப அறிவுள்ள ஜந்துவாக இருக்கிறதே!"

"அந்தச் சத்தம் கேட்டு என் அப்பா சட்டென எழுந்து கதவைத் திறந்து தோட்டத்துக்குள் ஓடிப் பார்த்தார். குறவன், வேலியைத் தாண்டி ஓடிக் கொண்டிருந்தான்."

"பரவாயில்லையே, உன் வீட்டுச் சேவல் ஒரு திருடனையே விரட்டி விட்டதே!" என்று ஆச்சரியத்தோடு சொன்னாள் விஜயாள்.

"அது சாதாரணச் சேவல் அல்ல. உயர்ந்த ஜாதி. எங்கப்பா அதை முப்பது ரூபாய் விலை கொடுத்து வாங்கி வந்தார். தலையை நிமிர்த்து நின்றால் சுமார் மூன்றடி உயரமிருக்கும். கம்பீரமான பார்வை. கொண்டையின் அழகே தனிதான். சேவல் என்றால் இரண்டு கைகளாலும் சேர்த்துக்கூடத் தூக்க முடியாது; அவ்வளவு கனம்......"

"ஒரு வேளை அது சண்டைச் சேவலாயிருக்குமோ!" என்று கேட்டாள் விஜயாள்.

"ஆமாம். ஒரு ஜமீன்தார் வீட்டில் சண்டைக்காகவே வளர்க்கப்பட்டது. பல சேவல்களை ஜயித்ததாம். ஆனால்எங்கப்பா அதைச் சண்டைக்கு விட மறுத்து விட்டார். எவ்வளவோ பேர் வந்து அதிகமாய்ப் பணம் கொடுத்து விலைக்குக் கேட்டார்கள். அதற்கு என் தந்தை ஒப்பவில்லை. எங்கப்பாவுக்குக் கோழிப் பண்ணையில் பிரியம் அதிகம். எப்பொழுதும் எங்கள் தோட்டத்தில் இருபது கோழிகளும் நாலைந்து சேவல்களும் இருக்கும். கோழிகளெல்லாம் பல தரப்பட்ட ரகங்களாக இருக்கும். நல்ல ஜாதிக் கோழிகளும் நிறைய இருக்கும். அவற்றுள் இந்தச் சேவல் நல்ல சிவப்பு நிறம். இலேசாக மஞ்சள் நிறமும் கலந்திருக்கும். வெய்யிலில் 'வெல்வெட்'டுப் போலத் 'தக தக' வென்று மின்னும். அது எங்கள் பண்ணைக்கு வந்ததுமே அங்கிருந்த மற்றச் சேவல்களெல்லாம் அதை ஒரு மாதிரியாகப் பார்த்தன. கோழிகளெல்லாம் மருண்டு ஓடின. அதனால் புதுச் சேவல் தனியாகவே நின்று வேடிக்கை பார்த்தது. ஒவ்வொரு கோழிக்கும் சேவலுக்கும் எங்கப்பா ஒரு பெயர் வைத்திருந்தார். இந்தப் புதுச் சேவலுக்கு 'ஜமீன்தார்' என்று பெயர்."

"ஜமீன்தார் வீட்டிலிருந்து வாங்கியதால் அந்தப் பெயரையே வைத்து விட்டாரோ!"

"அதுமட்டுமல்ல. அதன் நடை, பார்வை, கம்பீரம், கொக்கரிப்பு, எல்லாம் ஒரு ஜமீன்தாரைப் போலவே இருந்தது. இதனால்தான் அதனிடம் மற்றச் சேவல்களும் கோழிகளும் நெருங்கப் பயந்து கொண்டு ஒதுங்கின. ஆனால் இரண்டு நாளைக்குள் அந்த ஜமீன்தார் எப்படியோ கோழிகளையெல்லாம் சிநேகம் செய்து கொண்டு விட்டது! கோழிகளின் கூட்டத்தில் 'ரோட்' இனத்தைச் சேர்ந்த ஒரு வெள்ளைக் கோழி இருந்தது. அது குட்டையாகவும் பருமனாகவும் இருந்தது. 'லெகான்' ஜாதியைச் சேர்ந்த கறுப்புக் கோழி ஒன்று நெட்டையாகவும் ஒல்லியாகவும் இருந்தது. இரண்டு கோழிகளுமே பார்ப்பதற்குக் கவர்ச்சியாக இருந்தன. அவை இரண்டையும் ஜமீன்தார் சிநேகம் பிடித்து விட்டது..."

"ஓஹோ, காதலிகளைச் சேர்த்துக் கொண்டது என்று சொல். சரி, அந்தக் கோழிகளுக்கு உன் அப்பா என்ன பெயர் கொடுத்திருந்தார்!" என்று கேட்டாள் விஜயாள்.

"வெள்ளைக்கு வெள்ளையம்மா; கறுப்புக்குக் கண்ணம்மா. எங்கள் வீட்டின் பின் பக்கம் காலியாகக் கிடந்த இடத்தை ஒரு பெரிய நந்தவனமாக்கி விட்டார், அப்பா. அதில்தான் கோழிகளுக்கெல்லாம் தனித் தனியாகச் சிறு சிறு கூண்டுகள் கட்டப்பட்டிருந்தன. வெய்யில் காலத்தில் அங்கே குளு குளுவென்று இருக்

கும். அந்த ஜமீன்தார் எங்கள் தோட்டத்துக்குள் சுற்றும் போதும், பக்கத்துக் காட்டுக்குள் போகும்போதும், வெள்ளையம்மாளையும் கண்ணம்மாளையும் கூட்டிக் கொண்டேதான் செல்லும். இரண்டுக்கும் மத்தியில் அது கம்பீரமாய் நடந்து செல்வதைப் பார்க்கும் போது, ஒரு ராஜா தன் ராணிகளுடன் உலாவப் போவது போலிருக்கும். எங்கள் வீட்டில் உள்ளவர்கள் இதைப் பார்த்துச் சிரிப்பார்கள். இதர சேவல்களுக்கும் கோழிகளுக்கும் அக் காட்சி பொறாமையை உண்டு பண்ணியது. அவைகள் கூடிக் கூடி ஏதோ பேசிக் கொள்ளும்.''



"புதிதாய் வந்தவன் நல்ல அழகான பெண்கள் இருவரைச் சுலபமாக மயக்கி வசப் படுத்திக் கொண்டானே என்ற பொறாமையாகத் தான் இருக்கும்'' என்றாள் விஜயாள்.

"அதேதான். ஜமீன்தார் தன் காதலிகளை நல்ல உணவு கிடைக்கும் இடமாகத் தேடி அழைத்துச் செல்லும். வயிறு நிறைந்ததும் வெய்யில் படாத மரத்து நிழலிலோ, புதரின் அடியிலோ, அம் மூன்றும் போய்ப் படுத்து விடும். மத்தியில் ஜமீன்தார் படுத்திருக்க இரு பக்கத்திலும் காதலிகள் அதன் முதுகின் மேல் தலையைச் சாய்த்து இன்பமாக உறங்கும். இதைக் காண மற்றச் சேவல்களும் கோழிகளும் ஜாடையாக அந்தப்பக்கம் மேய வருவது போல மெதுவாக வரும். அவைகளைக் கண்டதும் ஜமீன்தார் தன் பாஷையில் 'கொக்கரக், கொக்கரக்...' என்று கோபமாகக் கொக்கரிக்கும். வேடிக்கை பார்க்க வந்தவை பயந்து ஓடிவிடும். என் அப்பாவுக்கும் ஜமீன்தாரின் பேரில் அதிகப் பிரியம். காரணம், அது வந்த அன்றேதான் நரிக் குறவன் அதைத் திருட வந்தான். அவனை அடித்து விரட்டி விட்டது. மாலை வேளையில் அவர் தோட்டத்துக்குள் உலாவச் செல்கையில் அதைப் பெயர் சொல்லிக் கூப்பிடுவார். எங்கிருந்தாலும் அவர் பின்னாலேயே போகும். ஒரு சமயம் ஒரு சிறு பாம்பைக்கூட அது கொத்திக் கொன்று போட்டு விட்டது. அப்போது என் தம்பி தோட்டத்தில் விளையாடிக் கொண்டிருந்தான். என் அப்பா அதைக் கையில் தூக்கி வைத்துக் கொண்டு உடம்பையெல்லாம் தடவிக் கொடுத்தார். ஜமீன்தார் எங்கள் வீட்டுக்குள் எல்லா இடங்களிலும் தாராளமாய் வந்து திரியும். என் தாயார் ஏதாவது தான்யம் போட்டால்தான் தின்னும். மற்றவைகளைப் போல அரிசி, நெல் மூட்டைகளைக் கொத்தித் திருட்டுத்தனமாகத் தின்னாது. அதனால் என் தாயாருக்கும் அதன் மேல் பிரியம். எங்கள் வீட்டில் அது என் தம்பியோடு ஒரு குழந்தை போலவே வளர ஆரம்பித்தது. மற்றவைகளுக்கு இது வேதனை யளித்தது. எல்லாம் ஒன்று கூடி அதைப் பண்ணையிலிருந்தே விரட்டிவிட வேண்டுமென்று சதி செய்தன. சதிக்கான திட்டத்தை அவைகள் வகுக்க முடியாமல் திண்டாடிக் கொண்டிருக்கையில் வெள்ளையம்மாள் கருவுற்று முட்டையிட ஆரம்பித்தது. இதை யறிந்த மற்றக் கோழிகள், கண்ணம்மாளைத் தனியாகக் கூப்பிட்டு, 'வெள்ளையம்மாளைப் பார்த்தாயா! கருவுற்றிருக்கிறாள்! ஜமீன்தாருக்கு நீயும் காதலிதானே! இன்னும் அவனோடு நீ ஏன் சிநேகம் வைத்துக் கொண்டிருக்கிறாய்!' என்று நயமாகத் துவேஷத்தை மூட்டிவிட்டன.

"வேறொரு நாள் வெள்ளையம்மாளிடம் சில கோழிகள் சென்று, 'உன் காதலனின் கெட்ட எண்ணத்தைக் கவனித்தாயா! கண்ணம்மாளுக்குக் கரு ஏற்பட்டால் அதன் அழகும், உடலும் உருக்குலைந்து விடுமென்று எண்ணி உனக்கு அந்தச் சங்கடத்தைக் கொடுத்திருக்கிறது. அவள் மட்டும் என்றும் குமரியாகவே இருக்க வேண்டுமாம். இந்த ரகசியம் உனக்குத் தெரியாமல் இன்னும் நீ அவனோடு உறவாடிக் கொண்டிருக்கிறாயே!'' என்று உபதேசம் செய்தன.

"ஐயோ, பாவம்! கள்ளம் கபடில்லாமல் களிப்பாயிருந்த காதலிகளின் மனத்தைக் கலங்க வைத்து விட்டார்களே எதிரிகள்! அப்புறம் என்ன ஆயிற்று...!'' என்று இரக்கத்தோடு கேட்டாள் விஜயாள்.

"எப்போதும் மாலை மயங்கும் நேரத்தில் கூண்டுக்குள் செல்லும் முன் 'ஜமீன்தார்' தன் காதலிகளிடம் கடைசி முறையாக இரண்டொரு இன்ப வார்த்தைகள் சொல்லி விட்டுத் தான் போவது வழக்கம். காதலிகளும் அதற்காகக் காத்து நிற்கும். ஆனால் அன்று வெள்ளையம்மாளும் கண்ணம்மாளும் ஜமீன்தாருக்காகக் காத்திராமல் கூண்டுக்குள் நுழைந்து விட்டன. அதற்கு முன்பெல்லாம் இரண்டு காதலிகளும் ஒரே கூண்டுக்குள்தான் சென்று உறங்கும். அன்று அவை தனித் தனியாகப் பிரிந்து போய்விட்டன. ஜமீன்தார் ஒரு தனி இடத்தில் வெகு நேரம் அவைகளுக்காகக் காத்திருந்து பார்த்து விட்டு, மனச் சோர்வுடன் தன் இருப்பிடம் போய் விட்டது. மறு நாள் விடியற்காலம் நான் போய்க் கதவுகளைத் திறந்து விட்டதும், கண்ணம்மா



ஜம், வெள்ளையம்மாளும் தன் னாடிக் கொண்டு வந்தன. இரவெல்லாம் தூக்கமில்லை என்று தெரிந்தது. ஜமீன்தார் வழக்கம் போல் கம்பீரமாகவே வெளியே வந்தது. காதலிகள் தன்னிடம் வராமல் தயங்கிக் கொண்டு நிற்பதைக் கண்ட ஜமீன்தார், மெதுவாக அவைகளிடம் சென்று, 'கக்கரக்...கக்கரக்' என்று ஏதோ கேட்டது.''

'''ஏன் கோபமாயிருக்கிறீர்கள்!' என்று கேட்டிருக்குமோ!'' என்று அதற்கு அர்த்தம் கற்பித்தான் விஜயான்.

''அப்படியிருக்காது. 'உங்கள் உடம்புக்கு என்ன!' என்று கேட்டிருக்குமென்று நான் நினைத்தேன். காதலிகள் இரண்டும் பதில் பேசாமல் மௌனமாய் நின்றன. மறுபடியும் ஜமீன்தார் சற்றுக் கோபத்தோடு 'கக்கரக்-கரகர' என்றது.''

'''என்ன, நான் கேட்கிறேன். பேசாமல் நிற்கிறீர்களே!' என்று கேட்டிருக்கும்'' என்று அதற்கும் அர்த்தம் சொன்னான் விஜயான்.

''அப்படியேதான் வைத்துக் கொள்ளேன். உடனே கோழிகள் இரண்டும் அதன் கோபத்துக்குப் பயந்து, மெதுவாக அதன் அருகில் போய் நின்றன. சேவல் முன்னேக்கி நடந்தது. வழக்கமாக இரைதேடிச் செல்லும் பக்கத்துத் தோப்புக்கு மூன்றும் சென்றன. என்றும் சளசளவென்று பேசிக் கொண்டே வரும் தன் காதலிகள் வாய் திறவாமல் மௌனமாக வருவதைக்கண்ட ஜமீன்தாரின் மனம் வேதனையடைந்தது. முதலில் ஆகாரத்தைத் தேடிக் கொடுத்து விட்டுப் பின்பு பேசிக் கொள்ளலாம் என்று வாய்க்கால் ஓரமாகச் சென்றது. வாய்க்காலின் கரையில் ஓர் இடத்தில் அரிசி சிதறிக் கிடந்தது. யாரோ மூட்டையில் கொண்டு செல்கையில் சிதறினது போலும். அதைப் பார்த்ததும், சந்தோஷமாகத் தன் காதலிகளைக் கூப்பிட்டது ஜமீன்தார். அவைகளோ வேறு பக்கம் திரும்பிக் கொண்டு அசட்டையாக நின்றன. வெள்ளையம்மாளிடம் மெதுவாக வந்து சேவல் ஏதோ சொல்லிற்று. அதற்கு வெள்ளையம்மாள் கோபமாக, 'கொரக், கொரக்...'—உனக்குப் பிரியமான அந்தக் கறுப்பியிடம் போய்க் கொஞ்சு—என்று பதிலளித்தது. 'நீ என்ன இப்படிச் சொல்கிறாய் வெள்ளை! எனக்கு உங்கள் இருவர் பேரிலும் பிரியம்தான்' என்று சேவல் சொல்லிவிட்டு, கண்ணம்மாள் பக்கம் திரும்பியது.

'கிர் கிர் கிர்'—என்னைப் பார்க்காதே. அந்த வெள்ளைக்காரியிடமே உன் கொஞ்சலை வைத்துக் கொள். நான் கறுப்பாயிருப்பதால் தானே என்னைக் கண்டால் உனக்குப் பிடிக்கவில்லை' என்று குறைப்பட்டுக் கொண்டது கண்ணம்மா.''

''நம் வீடுகளில் நடக்கும் சண்டை மாதிரியே இருக்கிறதே, சியாமளா! இதையெல்லாம் நீ எப்படிக் கவனித்து வந்தாய்!'' என்று ஆச்சரியமாய்க் கேட்டான் விஜயான்.

''கோழி இனத்தின் பழக்க வழக்கங்களை அறிய வேண்டுமென்று எனக்கு வெகு நாட்களாகவே ஆவல். அதனால் நான் எந்த நேரமும் எங்கள் தோட்டத்தில் அவைகளைக் கவனித்துக் கொண்டேயிருப்பேன். ஜமீன்தார் வந்த பின்பு எனக்கு அதைக் கவனிப்பதில் ஆர்வமிருந்தது.''

''அப்புறம் என்ன ஆச்சு! காதலிகளை ஜமீன்தாரால் சமாதானப்படுத்த முடிந்ததா!''

''எவ்வளவோ சொல்லியும் ஓரே பிடிவாதமாகக் கோழிகள் அசையாமல் நின்றன. ஜமீன்தாருக்குக் கோபம் வந்து விட்டது. 'சரி, எப்படியோ தொலையுங்கள். இனி என்னோடு நீங்கள் உறவாடவேவேண்டாம்!' என்று மனம் வெறுத்துச் சொல்லிவிட்டு, அருகிலிருந்த மாமரத்து நிழலில் போய்ப் படுத்துவிட்டது. கோழிகள் இரண்டும் ஒன்றை யொன்று

முறைத்துப் பார்த்தன. மறு கணம் இரண்டும் அடித்துக் கொண்டு புரண்டன. இரண்டின் சிறகுகளும் உதிர்ந்தன. கொண்டைகளி லிருந்து இரத்தம் கசிந்தது. கண்ணம்மாளின் கையே ஓங்கி நின்றது. வெள்ளையம்மாள் தள்ளாடியது. பொறுமையாகப் பார்த்துக் கொண்டிருந்த ஜமீன்தார் ஓடோடியும் வந்து கண்ணம்மாளை ஒரு போடு போட்டது. 'ஐயோ' என்று அலறிக் கொண்டு தரையில் சுருண்டு விழுந்தது கண்ணம்மா. வெள்ளை யம்மாளையும் இலேசாக முதுகில் கொத்தியது ஜமீன்தார். 'நான் என்ன செய்தேன்! அவள் தானே என்னை முதலில் வம்புக்கு இழுத்தாள்' என்று கண்ணீர் கலங்கச் சொன்னது வெள்ளை. கண்ணம்மாள் மயக்கமடைந்து அசைவற்றுக் கிடந்தது. உடனே பக்கத்தி லிருந்த வாய்க்காலுக்குப் பறந்து சென்று தன் வாய் நிறையத் தண்ணீர் மொண்டு வந்து அதன் முகத்தில் தெளித்தது சேவல். தண்ணீர் பட்டதும் இலேசாகக் கண்ணைத் திறந்து பார்த்தது கறுப்பு. சற்று நேரத்தில் மயக்கமும் தெளிந்து புரண்டு எழுந்து எங்கள் வீட்டுத் தோட்டத்தை நோக்கி விரைந்தோடியது...''

''ஜமீன்தார் அதைத் தடுத்து நிறுத்த வில்லையா, சியாமளா!''

''அது சென்ற பின்பு வெள்ளையம்மாளை மெதுவாகத் தன் சிறகால் அணைத்துக் கொண்டு மாமரத்து நிழலுக்குச் சென்று, 'உங்களுக்குள் ஏன் இப்படித் திடீர் மனத்தாங்கல் வந்தது!' என்று கேட்டதுஜமீன்தார். 'எல்லாம் உங்களால் தான். அவன் மூட்டையிட ஆரம்பித்தால் அவளுடைய அழகு குறைந்து போகும் என்று தானே, அவளிடம் வெறும் பேச்சோடு மட்டும் நிறுத்திக் கொண் டீர்கள்! நான் எக்கேடு கெட்டாலும் பரவா யில்லை என்று என்னைக் கெடுத்து விட்டீர்கள். இந்த வஞ்சனை உங்களுக்கு ஆகுமா!' என்று கண்ணீர் உகுத்தது வெள்ளையம்மாள். ஜமீன் தார் அதைக் கேட்டுச் சிரித்து, தன் கொண் டையைக் கடகட வென்று ஆட்டி, 'இதுதானு உங்கள் சண்டைக்குக் காரணம்! எனக்கு உங்கள் இருவரிடமும் எவ்வித வித்தியாசமும் கிடையாது. வீணாக உங்கள் மனத்தை யாரோ கெடுத்திருக்கிறார்கள். அடுத்த மாதமே அவ ளும் உன்னைப்போலவே கர்ப்பம் தரிக்கலாம்! அப்போது உங்களுக்குள்ளேயே சமாதான மாகி விடும்' என்று தேற்றியது.''

''கண்ணம்மாள் கண்ணீர் சிந்த ஓடி வரு வதைக் கண்ட பண்ணையிலிருந்த கோழிகளும் சேவல்களும் அதைச் சூழ்ந்துகொண்டு விசாரித் தன. அது நடந்ததை யெல்லாம் விவரமாக விளக்கியது. அதன் பரிதாப நிலைக்கு இரக்கப் பட்ட கோழிகள், 'ஒருவனை இருவர் காதலித் தால் எவளாவது ஒருத்திக்கு இக்கதிதான் ஏற்படும். நீ அந்த முரட்டுப்பயல் சகவா சத்தை இன்றோடு ஒழித்துக் கட்டு' என்று யோசனை சொல்லின. சற்றுத் துணிவு கொண்ட சேவல் ஒன்று, 'கண்ணம்மா, நான் உன்னை ஆதரிக்கிறேன். அவனுடைய பகை வந்தாலும் வரட்டும்' என்று முன் வந்து அதைத் தன் சிறகால் அணைத்துக் கொண்டு தனியாகக் கூட்டிப் போய் விட்டது. மற்றக் கோழிகளெல்லாம் தங்கள் சதித் திட்டம் பல னளித்தது குறித்து மனத்துக்குள் மகிழ்ந்தன.''

''ஜமீன்தார் திரும்பி வந்ததும் கண்ணம் மாளைத் தேடி யிருக்குமே!'' என்று விஜயான் வியப்புடன் கேட்டான்.

''ஆமாம். மஞ்சள் வெய்யில் இருக்கும் போதே காதலர்கள் திரும்பி விட்டார்கள். ஜமீன்தாரின் கண்கள் கண்ணம்மாளைத்தேடின. தோட்டத்தின் மூலை முடுக்கெல்லாம் ஓடிப் பார்த்தது. ஒரு இடத்தில் கண்ணம்மாள் வேறொரு சேவலுடன் ஏதோ பேசிய படி மேய்ந்துகொண்டிருந்தது. ஜமீன்தார் ஒரே பாய்ச்சலில் அந்தச் சேவலின் மேல் பாய்ந்து தன் பலமான அலகினால் அதன் தலையில் கொத்துக் கொத்தென்று கொத்தியது. எதிர்பாராத திடீர்த் தாக்குதலை அந்தச் சேவலினால் தாங்க முடியவில்லை.



எனினும் தன்னால் ஆன மட்டும் திருப்பித் தாக்கிப் பார்த்தது. சமாளிக்க முடியவில்லை. மற்றச் சேவல்களைக் கூவிக் கூவி அழைத்தது. அக்கம் பக்கத்தில் மேய்ந்து கொண்டிருந்த சேவல்க ளும் ஓடி வந்து ஜமீன்தாரை நாலாபக்கமும் தாக்கின. ஜமீன்தார் அவ்வளவையும் தனி வீர னாக எதிர்த்து நின்றது. ஒவ்வொருசேவலுக்கும் நல்ல அடி. கண்ணம்மாள் தூரத்தில் நின்று 'இவ்வளவுக்கும் காரணம் அந்த வெள்ளைச்சி தான்' என்று சொல்லிக் கதறிக் கொண் டிருந்தது. கோழிகளும் கூட்டமாய்க் கூடி விட்டன. சேவல்களின் சண்டை ஒருபுறம் நடந்து கொண்டிருக்கும் போதே கோழிகள், வெள்ளையம்மாளைச் சூழ்ந்து கொண்டு கொத் தின. அது உடனே தன் காதலனைக் கூவி யழைத்தது. தன் காதலிக்கு ஆபத்து என்று தெரிந்ததும் ஜமீன்தார், சேவல்களிடமிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு பறந்து ஓடி வந்தது. அது வருவது தெரிந்ததுமே கோழிகள் நாலா பக்கமும் சிதறின. வெள்ளையம்மாளின் உடலில் பல இடங்களில் காயங்கள் ஏற்பட்டிருந்தன. ஜமீன்தார் தன்

# நாடும் நேரமும்

## "உங்களுக்குக் கொடுக்கப்படும் உத்திரவாதம் எவ்வளவு காலம் நீடிப்பு?"

கடிகாரம் வாங்குபவர் ஒரு வருஷ காலத்தில் தமது கடிகாரத்தின் தயாரிப்பில் ஏதாவது குறைபாடுகள் இருக்கின்றனவா என்பதைத் தெரிந்து கொள்ளப் போதுமான அவகாசம் இருக்கிறது.

அதிக கால உத்திரவாதம் கொடுப்பதில் அர்த்தமே இல்லை. நீங்கள் கடிகாரம் வாங்கும்போது உங்கள் வியாபாரி அதிக கால உத்திரவாதம் கொடுப்பாரே யானால் நீங்கள் மேற்கூறியதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டியது அவசியம். உத்திரவாதத்தின் அதிக கால அளவு கடிகாரத்தின் தரத்தை நிரூபிப்பதல்ல.

நல்ல ஸ்விஸ் கடிகாரங்கள் ஒரு வருஷ உத்திரவாதம் உள்ளவை.



**இது தான் ஜுவெல்டு-லீவர்**

இவ்விரண்டு 'லீவர்-சுத்தியல்' களும் நாளொன்றுக்கு 4,32,000 தடவைகள் எஸ்கேப் - வீலின் பற்களைத் தட்டுகின்றன. இவற்றின் நுனிகளில் ஜுவல் பொருந்தியிருந்தால்தான் இச் சுத்தியல்கள் வருஷக் கணக்கில் தேய்மானத்தை எதிர்த்து நிற்கும். நிரந்தரமாக உழைக்க வேறு சில இடங்களிலும் ஜுவல்கள் தேவை. எனினும் இவ்விரண்டு ஜுவல்களும் அத்தியாவசியமானவை.

ஸ்விஸ் ஜுவெல்டு-லீவர் கடிகாரம் தான் நீங்கள் செலவு செய்யும் பணத்திற்குச் சரியான பெருமானம்



**ஸ்விட்ஸர்லாந்து கடிகாரத்தயாரிப்பாளர்கள்**

FHI - 20 - TAM



என்ன காரணத்தால்
மார்ட்டன்
மிட்டாய்கள் உயர்ந்தவை
பொறுக்கான சரக்குகள் ....
நூதன யந்திரங்கள் ....
ஏர்கண்டிஷனுள்ள தொழிற்சாலை....
மிக்க சுத்தமான, சுகாதாரமான
அமைப்பு ....
அனுபவம் முதிர்ந்த
தொழிலாளிகள்....
மார்ட்டன் மிட்டாய்கள் -
ருசியிலும் ஒரு புதுமை

தலையினால் அதன் உடம்பைத் தடவிக் கொடுத்தது. கண்ணம்மாள் எங்கோ ஒளிந்து கொண்டு விட்டது. அந்தச் சண்டையின் சத்தத்தைக் கேட்ட என் அப்பா வீட்டுக்குள்ளிருந்து ஓடி வந்து, மாலை மயங்கும் நேரமாகி விட்டபடியால், அவைகளைக் கூட்டுக்குள் அடைத்தார். ஜமீன்தார் தனி இடத்தில் அடைபட்டது.''

''வெள்ளையம்மாள் மற்றக் கோழிகளோடு எப்படி அடைபட்டிருக்க முடிந்தது!'' என்று கேட்டான் விஜயன்.

''இல்லை. அதுவும் தனியாக ஒரு கூண்டுக்குள் நுழைந்துவிட்டது. ஜமீன்தாரோடு போகவில்லை. சேவல்களும் கோழிகளும் இரவில் தனித்தனியாக இருக்கும்படி என் அப்பா பழக்கி யிருந்தார்.''



''அன்று இரவு காதலர்கள் மனம் என்ன பாடு பட்டிருக்கும்! பாவம்!''

''அதைவிட முக்கிய சம்பவம் அன்று இரவு தான் நடந்தது. ஒரு மாதத்துக்கு முன்பு எங்கள் தோட்டத்துக்குள் நுழைந்து தோல்வியடைந்து சென்ற நரிக்குறவன், தன் சகாக்கள் இருவருடன் சாமத்தில் வந்து விட்டான். அதை எப்படியோ அறிந்த ஜமீன்தார் கூண்டுக்குள் இருந்தபடியே சத்தம் போட்டது. அதன் இருப்பிடத்தைத் தெரிந்ததும் குறவன் சட்டென அதன் கதவைத் திறந்து விட்டான். ஜமீன்தார் வெளியே பாய்ந்தது. உடனே அவன் கொண்டு வந்திருந்த வலையைப் போட்டு அமுக்கிப் பிடித்துக் கொண்டான். இந்தச் சத்தத்தில் மற்றச் சேவல்களும் விழித்துக் கொண்டாலும் சத்தம் போடவில்லை. வெள்ளையம்மாள் மட்டும் தன் காதலனின் அபயக்குரலைக் கேட்டு உதவிக்கு வரும்படி என் அப்பாவுக்குக் குரல் கொடுத்தது. என் அப்பாவும் எப்படியோ விழித்துக் கொண்டு, கதவைத் திறந்து கொண்டு விளக்குடன் ஓடி வந்தார். நானும் என் தாயாரும் அவர்பின் ஓடி வந்தோம். அதற்குள் குறவர்கள் வேலியைத் தாண்டி ஓடி விட்டார்கள். ஜமீன்தாரின் அலறல் மட்டும் தூரத்திலிருந்து இலேசாகக் கேட்டது. வலையில் போட்டுச் சுற்றிக் கொண்டு ஓடிக் கொண்டிருந்தார்கள். என் அப்பா அவர்களைப் பின் தொடர யத்தனித்தார். ஆனால் என் தாயார் அவர் கையைப் பிடித்து, 'கேவலம் ஒரு சேவலுக்காக இந்தச் சாமத்தில் நீங்கள் போகலாமா! குறவர்கள் பொல்லாதவர்கள். கொலைக்கு அஞ்சாதவர்கள்!' என்று தடுத்து நிறுத்தி விட்டார். மற்றவைகளெல்லாம் பத்திரமாய் இருக்கின்றனவா என்று பார்க்க நான் விளக்கை எடுத்துக் கொண்டு ஒவ்வொரு கூண்டின் கதவையும் திறந்து பார்த்தேன். குபீரென்று வெள்ளையம்மாள் வெளியே பறந்து வந்து குறவர்கள் ஓடிய பக்கம் தலைதெறிக்க ஓடியது.

''அப்பா நரிக் குறவர்கள் இருந்த இடத்துக்குச் சென்று விசாரித்தார். வலையைப் பிரித்து அவர்கள் ஜமீன்தாரைப் பிடிக்க முயன்ற போது ஜமீன்தார் ஒரு குறவனின் கண்ணைப் பலமாகக் கொத்தி மற்ற இரண்டு பேரின் மேலும் பாய்ந்து இரத்தம் வரும்படி பிறாண்டி விட்டுத் தப்பி ஓடி விட்டதாகவும் சொன்னார்கள். அதைத் துரத்திக் கொண்டு மற்றக் குறவர்கள் ஓடினார்களாம். அப்படி ஓடும்போது அந்தச் சேவலோடு ஒரு வெள்ளைக் கோழியும் அதனோடு சேர்ந்து ஓடியதைக் கண்டதாகவும் சொன்னார்கள்!''

''அப்படியானால் அவைகள் உங்கள் தோட்டத்துக்குத் திரும்பி வரவில்லையா!''

''இல்லையே விஜயா. அவைகள் திரும்பி வந்தால் மறுபடியும் ஏதேனும் ஆபத்து வரும்; பண்ணையிலும் விரோதிகள் இருப்பதால் நிம்மதியாக இன்பம் அனுபவிக்க இயலாதென்று நினைத்துக் காட்டுக்குள் ஓடிவிட்டன என்றே தெரிந்தது. நாங்களும் பல நாட்கள் தேடிப் பார்த்தோம். பயனில்லை.''

''கண்ணம்மாள் இதைப்பற்றிக் கவலைப்படவில்லையோ!''

''அதைச் சொல்ல மறந்து விட்டேனே! இரண்டு மூன்று நாட்கள் அது ஜமீன்தாரைத் தேடிப் பார்த்தது. ஆகாரமே சாப்பிடவில்லை. மற்றக் கோழிகளிடமும் அது சேருவதில்லை. மரத்தடியிலேயே பேசாமல் படுத்திருந்தது. என்ன வியாதி அது என்று எனக்குத் தெரிந்து விட்டது. ஒரு நாள் மாலை கோழிகளையெல்லாம் அடைக்க நான் சென்றபோது கண்ணம்மாள் சோர்ந்து கிடந்தது. எழுந்திருக்க முடியவில்லையோ என்று நான் மெதுவாகத் தூக்கினேன். அது செத்துக் கிடந்தது. நான் 'கோ'வென்று கதறி அழுது விட்டேன்.''

''ஐயோ, பாவம்! கண்ணம்மாளுக்கும் ஜமீன்தார் பேரில் உண்மைக் காதல்தான் இருந்திருக்கிறது. மற்றக் கோழிகள்தான் அதன் மனத்தைக் கெடுத்து, பிரித்து வைத்து விட்டன'' என்று இரக்கப்பட்டான் விஜயன்.

''நல்ல வேளையாக ஜமீன்தார், குறவர்களினால் கொலை செய்யப்படாமல் தப்பியதே என்று நாங்கள் எல்லாம் ஆறுதல் அடைந்தோம். ஆனால் கண்ணம்மாள் அதை நினைத்தே உயிரை விட்டது, எங்களை உருக்கி விட்டது.''

''வெள்ளையம்மாள் ஜமீன்தாரைத் தேடிப் போகாதிருந்தால் ஒருவேளை அது உன் வீட்டுக்கே திரும்பி யிருக்கு மல்லவா!''

''நீ அப்படி நினைக்கிறாய். ஆனால் குறவர்கள் ஜமீன்தாரைக் கொன்றிருந்தால் அவர்களிடமே தானும் பலியாகலாம் என்று எண்ணி வெள்ளையம்மாள் சென்றிருக்கலா மல்லவா! காதலன் தப்பிவிட்டான் என்று தெரிந்ததும் அதனோடு கைகோர்த்துக்கொண்டு அதுவும் ஓடி விட்டது!''

''மனிதர்களுக்குக்கூட இந்தத் தியாக புத்தி இருக்குமா என்பது சந்தேகந்தான்!''

விஜயனின் கண்களில் நீர் துளித்தது. ஒரு நீண்ட பெருமூச்சுடன் அவன் எழுந்தான்.

# பாஞ்சாலி




வேங்கைப் பாளையம் கிராமத்தில் பஞ்சாயத்து கூடியது. ஊருக்கு மத்தியில் கப்பும் கிளையுமாகப் படர்ந்து கட்டியங் கூறும் நாவல் மரம் ஒன்று; அதன் நிழலிலே ஆனந்த நிஷ்டையில் 'மொழு மொழு' வென்று ஒரு கல்லுப் பிள்ளையார்; அவர் கண்ணுக்கு முன்பாக விசாலமான ஒரு புல் வேய்ந்த சாவடி; இங்கு தான் பஞ்சாயத்தார்கள் கூடினார்கள்.

ஏட்டு சிங்காரத் தேவனைப் பற்றி உங்களுக்கு இந்த இடத்தில் கொஞ்சம் சொல்ல வேண்டும். இந்தப் பஞ்சாயத்து கூடுவதற்கே மூல புருஷன் அவன் தான். தன் கொழுந்தியாள் பாஞ்சாலிக்கு அவன் புருஷன் சங்கிலித்தேவன் இழைத்த கொடுமைகளுக்குப் பரிகாரம் தேட முயல்பவனைப் போல இந்தப் பஞ்சாயத்தைக் கூட்டியிருந்தான். இதில் அவன் பாஞ்சாலியின் விருப்பத்தைக் கேட்கவில்லை. பெண்ணைப் பிறந்தவளிடம் என்ன கேள்வி என்று நினைத்தானோ என்னவோ!

"ஏ, சிங்காரம்! பாஞ்சாலியை ஏன் இன்னங் காணலே! அவள் வராமல் வெவகாரம் எப்படித் தீரும்! யாராவது போய்க் கூட்டிக்கிட்டு வாங்க; மெத்தனமா இருக்கப்போறான்" என்று அலுத்துக் கொண்டார் நாட்டாண்மைக்காரர்.

"இதோ அஞ்சு நிமிஷத்திலே ஓடியாந்துடறேன்!" என்று சொல்லி விட்டு ஏட்டு சிங்காரம் புறப்பட்டுப் போனான்.

சங்கிலித் தேவனுக்கு முகத்தில் ஈயாடவில்லை. எட்டு வருஷங்களுக்குப் பிறகு கடல் கடந்து வந்தும், தொட்டுத் தாலி கட்டிய மனைவியைப் பார்க்கப் போகிறோம் என்ற நினைவின் சலனம் கூட அவன் முகத்தில் பிரதிபலிப்பதாகத் தெரியவில்லை.

சிங்காரம் பாஞ்சாலியின் வீட்டை அடைந்ததும் அவன் நெஞ்சு காரணமில்லாமல் அடித்துக் கொண்டது. வீட்டுக்குள்ளிருந்து விம்மல் ஒலி கேட்டதும் சற்றுத் துணுக்குற்றவனாய், "பாஞ்சாலி! ஏ, பாஞ்சாலி!" என்று கூப்பிட்டபடியே புறங்கையால் கதவைத் தட்டினான்.

பாஞ்சாலி கதவைத் திறந்தாள். சிங்காரத்தைக் கண்டதும் அவளுக்குக் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது.

"மச்சான்! உங்களுக்கே இது நல்லா இருக்கா! என்னைக் கேட்காமல் எப்படிப் பஞ்சாயத்துக்கு ஏற்பாடு பண்ணினீங்க! புருசன்-பொஞ்சாதிக்குள்ளே ஆயிரம் இருக்கும். அதுக்காக நான் அவங்களைக்கூண்டிலே ஏத்திக் கேக்கற மாதிரி ஆக்கிப்புட்டீங்களே!" என்று சொல்லிவிட்டு அழ ஆரம்பித்து விட்டாள்.

"நீ பாட்டுக்கு அழுதுகிட்டிருந்தா ஒண்ணும் நடக்காது பாஞ்சாலி. எல்லாம் பஞ்சாயத்துலே வந்து சொல்லிப்புடு. பிள்ளையாரப்பன் கைவிடமாட்டான். ம்...இன்னும் என்ன யோசனை! உன் மகன் சாமிக்கண்ணு பள்ளிக்கூடத்திலேருந்து வர்ற நேரமாச்சு, அதுக்குள்ளே போயிட்டு வந்துடலாம்..."

மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு பாஞ்சாலி சிங்காரத்தைப் பின் தொடர்ந்தாள்.

பாஞ்சாலி வந்ததும் பஞ்சாயத்துச் சாவடியில் ஒரு பரபரப்பு உண்டாயிற்று. சங்கிலித் தேவன் முகத்தை மாற வைத்துக் கொண்டான். ஆனால் கூடியிருந்தவர்கள் எல்லோரும் தங்கள் அனுதாபம் நிறைந்த பார்வையை அவள் மேல் வீசி எறிந்தனர்.

ஒருவர் கேட்டார்:

"பாஞ்சாலி! நீ என்னத்தையோ மோர்த் தண்ணியிலே போட்டுக் குடுத்து அவனைக் கொல்றதுக்குப் பார்த்துட்டேன்னு சொல்றானே, அதுக்கு நீ என்ன சொல்றே!"

"ஐயா! பெரியவங்களே! சத்தியமா சொல்றேன்; இந்தப் புள்ளையாரப்பன் கேட்டுகிட்டுத்தான் இருக்காரு!......குடிக்கத் தண்ணி வேணுமின்னு கேட்டாங்க. நான் மோரைக் கொண்டாந்து கொடுத்தேன். அதிலே......"

சற்றுத் தடுமாறினாள் பாஞ்சாலி.

"சண்டாளி! அதிலே வெசத்தைப் போட்டானா இல்லையான்னு கேளுங்க!" என்று ஆங்காரமான குரலில் இடைமறித்தான் சங்கிலித்தேவன்.

"ஐயோ! புருசனைக் கொல்லணும்னு நெனைச்சா நான் உருப்படுவேனா! அவங்க ஒழுங்கா இருக்கணும்; புள்ளையாரப்பா! நீதான் அவங்களுக்கு நல்ல புத்தியைக் குடுத்துக் காப்பாத்தணும்னு திருநீறு போட்டுக் குடுத்தேன்......"

"அது சரி; புருசனுக்கு நல்ல புத்தியைக் கொடுக்கணும்னு திருநீறு போட்டுக் குடுத்தேன்னு சொல்றியே. அப்போ உன் புருசன் அப்படி என்ன கெட்டுப் போயிட்டான்! காரணம் வேணுமில்லே!"

சங்கிலித் தேவனின் முகத்தில் இப்போது பீதியும் வெறுப்பும் கவ்விப் பிணைந்தன.

பாஞ்சாலி குன்றிப் போய் விட்டாள். புருஷனுக்கு வரும் இழுக்கு அவளுக்கும்தானே! ஆகவே படபடப்புடன் சொன்னாள்:

"சொத்துச் சம்பாதிக்க மியான் ராவுத்தர் கூட பினாங்குக்குப் போறேன்னு சொன்னாங்க! எனக்கு எப்படி இருக்கும்! அப்போ நான் வேறே மூழ்காமல் இருந்தேன். அதனாலே அழுது, விழுந்து போக வேண்டாம்னு சொன்னேன். அவங்க போவத்தான் போவேன்னு மூரண்டு பிடிச்சாங்க...என் மனம் குழம்பிப் போயி, கடவுளே, நீதான் அவரைக் காப்பாத்தணும்னு திருநீறு போட்டுக் கொடுத்தேன். அதை அவங்க......" மேற்கொண்டு சொல்ல முடியாமல் விம்மல் அவள் தொண்டையை வந்து அடைத்தது.

"நீலிக்குக் கண்ணீரு நெத்தியிலேயாம்! இந்தப் பசப்புக்கு நானா மயங்குகிறவன்! ஜென்மத்துக்கும் உம் மூஞ்சியிலே நான் முழிக்க மாட்டேன். என்னைக்கோ ஒனக்கும் எனக்குமுள்ள தொந்தம் அறுந்து போயிட்டது. இனிமே அது ஒட்டவா போவுது!" என்று பொரிந்து தள்ளி விட்டுத் தடிக் கம்பை எடுத்துக் கொண்டு 'விறுவிறு' என்று அந்த இடத்தை விட்டுக் கிளம்பிப் போய் விட்டான் சங்கிலித்தேவன்.

கூட்டத்தில் 'கச முச' வென்று பலவகைப் பேச்சுக்கள் எழுந்தன. அதை அடக்கி விட்டுக் கடைசியில் நாட்டாண்மைக்காரர் சொன்னார்:

"பாஞ்சாலி! இனி அந்தப் பயலை நம்பற திலே புண்ணியமில்லே. உன் பிள்ளை நாளைக்கு உன்னைக் காப்பாத்துவான். அது வரைக்கும் காலையும் கையையும் வெச்சுப் பிழைச்சுக்கோ!"

பஞ்சாயத்து கலைந்தது.

**   **   **

பாஞ்சாலியின் கன்னிப் பருவம் வேங்கைப் பாளையத்தில் நிலவி வந்த காலம் அது. சாலையோரத்து வேலியில் மலர்ந்திருக்கும் கருகமணிப் பூக்களுக்கு மத்தியில் ஒரு மஞ்சள் ரோஜா தலையசைத்து ஆடி நின்றால் அது போவோர் வருவோரது கண்களைப் பறிக்குமல்லவா! அதைப் போலத்தான் பாளையத்து வாலிபர்களின் கவனத்தை எல்லாம் ஒருங்கே கவர்ந்து விட்டிருந்தாள் பாஞ்சாலி!

அவளைச் சொல்ல என்ன குற்றம்! அப்படி இருந்தது அவள் அழகு! வெற்றிலையை வாய் நிறையச் சுவைத்துக் கொண்டு அவள் கொடிக் காலில் நிற்கும் பொழுது பார்த்து விட்டால் யாருமே மயங்கி விடுவார்கள்.

"தாயும் தகப்பனுமில்லாத பொண்ணு, தன் நினைத்த மூப்பில் விட்டுவிட்டான்" என்று யாரேனும் சொல்லி விடுவார்களோ என்று பயந்தான் பாஞ்சாலியின் பாட்டன். உதிரும் நிலையிலிருந்த அவனுக்கு இப்போது புதிய கவலை ஒன்று உண்டாயிற்று. பாஞ்சாலியை எவன் கையிலாவது பிடித்துக் கொடுத்து விட வேண்டும்! இதுதான் கிழவனுக்குச் சதா ஸ்மரணையாயிருந்தது.

"நிழல் மிதிபட்டால் கொடி கசங்கிப் போய்விடாதுதான் தாத்தா! ஆனால் பெண் கொடியோ!" என்று கிழவனிடம் வந்து பேச்சுக் கொடுத்தான் சிங்காரம். பாஞ்சாலிக்கு அவன் 'மச்சான்' வேணும். தனக்குத்தான் அவள் பிறந்திருக்கிறாள் என்ற நினைப்பில் நெஞ்சு விரிந்து போயிருந்தான் சிங்காரம். வேங்கைப் பாளையமே பொறாமைப்பட்டது சிங்காரத்தைக் கண்டு!

ஒரு நாள் கிராமத்துக்குப் புதிதாக ஒரு ஆள் வந்தான். நல்ல உயரம். வாட்ட சாட்டமாகப் பார்ப்பதற்குக் கம்பீரமான தோற்றம். பெயர் சங்கிலித் தேவன் என்று சொல்லிக் கொண்டான். பொருத்தமான பெயர்தான்! பார்ப்பவர்களைப் பிணைத்து இழுக்கும் சக்தி அவன் பார்வைக்கு இருந்ததல்லவா!

இப்பேர்ப்பட்ட இறுதா வீரனும் கிராம மோகினியும் ஒரு நாள் தற்செயலாகக் கொடிக் காலில் சந்தித்து விட்டனர். மஞ்சள் வெய்யில் வெற்றிலைத் தளிரின் மேல் துள்ளி விளையாடும் மாலை நேரம். கரையின் மேல் பராக்குப் பார்த்தபடியே இறைவையில் தண்ணீர் இழுத்துக் கொண்டிருந்த பாஞ்சாலி கால் வழுக்கித் 'தடால்' என்று கிணற்றுக்குள் விழுந்து விட்டாள். "ஐயோ! அம்மா!" என்ற அபயக் குரல் கேட்டுக் கரைமேல் போய்க் கொண்டிருந்த சங்கிலித் தேவன் தலையிலிருந்த கொழுஞ்சிக் கட்டைக் கீழே போட்டு விட்டு ஓடோடியும் வந்தான்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் பாஞ்சாலிக்கு மெல்ல உணர்வு வந்தது. சேலையெல்லாம் நனைந்து 'ஜிலு ஜிலு' வென்ற உணர்ச்சி. மெதுவாகக் கண்களை விழித்துப் பார்த்தாள். சங்கிலித் தேவனின் மடியில் தான் படுத்திருப்பது தெரிய வந்தது. சட்டென்று எங்கிருந்து தான் அவ்வளவு சக்தி வந்ததோ? ஒரே துள்ளில் மின்னல் துவண்டதைப் போல எழுந்து உட்கார்ந்தாள். அவள் முகம் கூச்சத்தால் வெளிறியது; சிவந்தது; இன்னும் என்னென்ன வெல்லாமோ நிறங்கள் காட்டியது அவள் முகம், அந்த ஒரு கண நேரத்தில்!

"என்ன குட்டி, அப்படி மொறைச்சுப் பாக்கறே! நான் என்ன கடுவாயா, புலியா!



உனக்குப் பயமாயிருந்தா நான் போயிடறேன்'' என்று சொல்லி விட்டு எழுந்து நடந்தான் சங்கிலி. கரையிலே போய்த் திரும்பிப் பார்த்ததும் பாஞ்சாலியும் அவன் பக்கத்தில் நின்று கொண்டிருந்தாள்!

''ம்.......ஒரு கை பிடி குட்டி!'' என்றான், கீழே கிடந்த குழைக்கட்டைத் தூக்கிய படியே. பாஞ்சாலி அவன் தலையில் தூக்கி விட்டாள். சங்கிலித்தேவன் என்ன நினைத்துக் கொண்டானோ, தலையிலிருந்த கொழுஞ்சிக் கட்டில் ஒரு இணுக்கைக் கிள்ளிப் பாஞ்சாலி அள்ளிச் செருகியிருந்த கொண்டையில் சூடி விட்டான். பாஞ்சாலிக்கு ஒரு இனந் தெரியாத மயக்கம்!

சங்கிலித்தேவன் போயே விட்டான். ஆனால் பாஞ்சாலிக்கு இன்னும் அவன் மடியில் தலை வைத்துப் படுத்திருப்பதாக ஒரு பிரமை.

தன்னை அறியாமலேயே தன்னுள்ளத்தில் கிளர்ந்தெழுந்த காதல் சுடரை இன்று பூரணப் பொலிவுடன் வெளிக் கொணர்ந்து ஒளிவீசச் செய்தாள் அவள்; என்றாகிலும் ஒரு நாள் தன்னுள் மறைபொருளாக ஒளித்து வைத்திருக்கும் செக்கர் நிறத்தை வெளிக்காட்டி விடும் வெற்றிலைத் தளிரைப் போல!

கடைசியில் அவள் கனவு தான் பலித்தது. மனம்போலவே சங்கிலித் தேவனுக்கு மாலை விட்டாள். பாஞ்சாலி தனக்குத்தான் என்று ககன வெளியில் பறந்து கொண்டிருந்த சிங்காரம் ஏமாற்றத்தினால் இறக்கை ஒடிந்து கீழே விழுந்தான்.

இதுதான் பாஞ்சாலி காதலித்துக் கல்யாணம் செய்து கொண்ட கதை. ஆனால் அவள் வாழ்ந்த கதையோ......!

கல்யாணம் நடந்த மறுமாதமே கிழவன் கண்களை மூடிவிட்டான். பாஞ்சாலிக்கு இப்போது சங்கிலித்தேவனே சகலமும். அவள் இதயத்தோடு இதயம் ஒன்றி அன்பு என்னும் அறுக்க முடியாத சங்கிலியில் தானும் ஒரு கண்ணியாக இணைந்து கொண்டாள் அவள்.

சங்கிலியின் கண்காணிப்பில் கொடிக்கால் தழைத்தது. பாஞ்சாலி புருஷனுக்குத் தினமும் கஞ்சி கொண்டு போவாள். அவள் கையால் சோறு பிழிந்து போட்டால் சங்கிலித் தேவனுக்குச் சாப்பிடுவது பழையது என்ற நினைவே அற்றுப் போய்விடும். இப்படியாக அவர்கள் இன்ப வாழ்க்கை சென்று கொண்டிருந்தது. அப்போது அவள் கருவுற்றிருந்தாள். கணவனின் அன்பையும் ஆதுரத்தையும் அதிகமாகப் பெறவேண்டிய கட்டத்தில் சங்கிலியின் விபரீதமான போக்கால் மனமுடைந்தாள் பாஞ்சாலி. எந்தப் பாவிகள் கண் போட்டார்களோ!

கொடிக்கால் பக்கம் சங்கிலி திரும்பிக்கூடப் பார்ப்பதில்லை. அல்லித்துறை சந்தையில் புகையிலை வியாபாரம் செய்யப் போகிறேன் என்று சொல்லிக்கொண்டு அடிக்கடி போய் வருவான். போனால் அவனுக்கு வீடு என்று ஒன்று இருக்கிறது; அதில் ஒரு மனைவி, அவளுக்கு ஒரு நெஞ்சம், அதிலே ஒரு நினைப்பு—என்பதெல்லாம் அடியோடு மறந்து விடும். ஆரம்பத்தில் பாஞ்சாலி கேட்டதற்கு 'இந்தா, எம்மேலே வீணா சந்தேகப்படாதே. ராசாத்தியாட்டமா நீ இருக்கே. இனிமேல் ராசாப் பயலும் பொறக்கப் போறான்; எனக்கு என்ன குறை!'' என்று சொல்லி விட்டான். பாஞ்சாலி முடிவில் அவனை நம்பினாள். பின்பு சங்கிலியின் போக்கு வரவர மோசமாகிக் கொண்டே வந்தது.

இந்தச் சமயத்தில்தான் அவள் மச்சான் ஏட்டு சிங்காரம் அந்தப் பயங்கரமான சேதியை அவள் காதில் போட்டான்.

அழகுச் சிலை போன்ற அவளை விட்டு விட்டு அல்லித்துறை ரத்தினத்தின் மோகம் பிடித்து அவள் புருஷன் வீட்டை மறந்து திரிகிறான் என்றால் எப்படி இருக்கும்!

பாஞ்சாலியின் உள்ளம் உடைப்பெடுத்தது. 'ஓ' வென்று கதறினாள்; கண்ணீர் வடித்தாள்



நாலு நாட்கள் கழித்துச் சங்கிலித் தேவன் வீட்டுக்கு வந்தான். அந்த நாலு நாட்களும் பாஞ்சாலி பட்ட மன வேதனை, அப்பப்பா! பாயில் படுத்து அழுதபடியே 'அப்படிக் கேட்க வேண்டும், பிறகு இப்படிக் கேட்க வேண்டும்' என்றெல்லாம் தனக்குள்ளே பிதற்றிக் கொண்டிருந்தாள். ஆனால் சங்கிலித் தேவன் வந்து கதவைத் தட்டியதும் எல்லா நினைவுகளும் மாயமாய்ப் பறந்தோடி விட்டன.

"பாஞ்சாலி, என்ன சொன்னாலும் உன் புத்தியை விட மாட்டே! இப்போ என்ன குடி மூழ்கிப் போச்சு! தலைவிரி கோலமா அழுதுகிட்டிருக்கே......!" என்று ஆரம்பித்தவன், கடுமையான குரலில் "நான் ஒங்கிட்ட முக்கியமா ஒரு சேதி சொல்லணும்னுதான் இப்போ வந்தேன். நம்ம மியான் ராவுத்தர் இருக்காருல்லே; அவரு கூட நான் இன்னும் ரெண்டு நாளையிலே பினாங்குக்குப் போகப் போறேன் ......" என்றான்.

"ஏன்!"

"ஏனா! நாலு காசு சம்பாதிக்கத்தான்!"

"முடியாது மச்சான் முடியாது! என்னை விட்டுட்டு நீங்க எங்கேயும் போகக் கூடாது" என்று கதறினாள் பாஞ்சாலி. அது சங்கிலித் தேவனின் மனத்தைக் கரைக்கவில்லை. கடைசியில் விபூதியைப் போட்டுக் கொடுத்துப் பார்த்தாள். அவள் கஷ்டகாலம்! அதுவும் விஷமாக அல்லவா அவன் கண்களுக்குப் பட்டு விட்டது!

முடிவில் சங்கிலித்தேவன் கப்பலேறினான். 'பாஞ்சாலிக்கு வேங்கைப் பாளையமே கடுவாய்க் காடாக மாறியது. வெளியில் தலை காட்ட வெட்கப்பட்டாள். கொடிக் காலில் வெற்றிலைத் தளிர்கள், முருங்கைப் பிஞ்சுகள் எல்லாம் பறிப்பாரற்றுத்தாமே முற்றி உதிர்ந்தன. மனம் ஒரு நிலையில் இல்லாமல் பைத்தியம் பிடித்தவளைப் போல அவள் வீட்டுக்குள் முடங்கிக் கிடந்தாள்.

** ** **

காலம் மெல்ல நகர ஆரம்பித்தது. சாமிக்கண்ணு பிறந்தான். பாஞ்சாலி குதூகலப்பட்டாள். தனியாகச் சஞ்சலப் பட்டுக் கொண்டிருந்தவளுக்கு இப்போது ஒரு உயிர்த்துணை கிடைத்து விட்டது! குழந்தையின் பளிங்கு முகத்தைப் பார்த்துக் கொண்டே நாளையும் பொழுதையும் தள்ளி வந்தாள்.

எப்போதாவது ஏட் சிங்காரம் பாஞ்சாலியைப் பார்க்க வருவான். முன்னெல்லாம் அவனைக் கண்டால் எரிந்து விழுந்து கொண்டிருந்தவள் இப்போது ஒன்றுமே சொல்லாமல் இருந்தாள். தாய்மையின் பண்பு தொட்டுப் பார்த்த உள்ளமல்லவா! அதில் பழைய படபடப்பெல்லாம் அடங்கி ஒரு பெருந்தன்மை ஏற்பட்டிருந்தது.

வளர்ந்து விளையாடிய சாமிக்கண்ணு கொஞ்சநாளையில் முற்றத்தில் 'குடுகுடு'வென்று ஓடினான். மழலை மொழி மணி கொண்டு அடித்ததைப் போன்ற பேச்சாக மாறியது. "கண்ணு கண்ணு!" என்று அடிக்கொரு தரம் மகனைக் கூப்பிட்டு மகிழ்வாள் பாஞ்சாலி. அந்த மகிழ்ச்சியின் மாய வேகத்தில் நழுவிச் சென்ற காலத்தைக்கூட அவள் கவனிக்கவில்லை.

விளையாட்டுப் போல் வருஷம் எட்டு அல்லவா வேகமாக ஓடிப்போய் விட்டது!

மியான் இராவுத்தரிடம் கோபித்துக் கொண்டு சங்கிலித் தேவன் திரும்பி வரத்தான் செய்தான். வந்தவன் அவன் வரவுக்காக ஆவலுடன் காத்துக் காத்து, கண் பூத்துப் போய் இருக்கும் அன்பு மனைவியையும், பார்த்தே அறியாத 'ராசாப் பயலையும்' பார்க்க ஓடோடியும் வரவில்லை. பாஞ்சாலியை நெஞ்சிலிருந்தே அழித்து விட்டவன் போல அல்லித் துறையிலேயே தங்கி விட்டதாகச் செய்தி வந்தது.

கடைசியில் ஏட் சிங்காரத் தேவன் பஞ்சாயத்துக்கு ஏற்பாடு செய்தான். சங்கிலித் தேவனோ புதிய ஒரு மோக மயக்கில் சிக்குண்டு! பாஞ்சாலியை வெறுத்த மாதிரி பேசி விட்டுப்



## அமுதத் துன்முகியே!

என். எஸ். சிதம்பரம்

உலகைக் கவரும் மன்மதனின்
உயர்ந்த புகழ்சேர் எழில்வருடம்
உறைந்த திங்கள் பத்திரண்டும்
உறக்கம் போலும் கழிந்திடவே

திலகம் எனவே திகழ்ந்தொளிரும்
திருவும் வளமும் அளித்திலங்கும்
தெருளும் அருளும் அமைந்தினிக்கும்
திசைகள் போற்றும் நல்லாண்டாய்

நிலவ வேண்டுங் கருத்துடனே
நெறிகொள் அமுதந் துன்முகியே!
நிலைக்கும் தமிழின் புத்தாண்டே!
நிறைந்த சிறப்பாய் வருகவே!

இலகும் பரமன் கருணையினுல்
இதயம் மகிழ்ந்து மக்களெல்லாம்
இதமார் நலன்கள் எய்திடவே
இனிதே வருக வருகவே!

போய்விட்டான். பாஞ்சாலியோ தான் அனுபவிக்க வேண்டிய கஷ்டங்கள் இன்னும் பாக்கி இருக்கின்றன என்று நினைத்தாள். அந்த நிலையிலும் கணவனிடம் உள்ள அந்தத் தூய அன்பு கொஞ்சங்கூடக் குறைந்து போய் விடவில்லை.

** ** **

சோதனைகள் பாஞ்சாலியைத் தொடர்ந்து தாக்க ஆரம்பித்தன. ஆடி மாதத்துப் புயலில் கொடிக்கால் முழுவதும் நாசமாகி விட்டது. இறைவையோ காய்ந்து அடியில் பாளம் பாளமாக வெடித்துப் போயிருந்தது. ஆகவே வேங்கைப் பாளையத்தை விட்டு விட்டுப் பிழைப்பை நாடி அல்லித்துறைக்கே வந்து சேர்ந்தாள் பாஞ்சாலி. அல்லித்துறைக்கு மேற்கே ஒன்றரை மைல் தூரத்திலுள்ள பொட்டல் காட்டில் ஒரு பஞ்சாலை அப்பொழுதுதான் ஆரம்பித்திருந்தார்கள். அதில் பஞ்சப் பொதிகளைத் தரம் பிரித்துப் பொறுக்கும் வேலைக்குப் பெண் பிள்ளைகளை எடுக்கிறார்கள் என்று கேள்விப்பட்டிருந்தாள். அந்த வேலையில் சேர்த்துக் கொள்ள மாட்டார்களா என்று திகைத்து மயங்கும் பொழுது தற்செயலாகக் கொல்லன் வெள்ளையத் தாத்தாவைச் சந்தித்தாள் பாஞ்சாலி. கிழவனுக்கும் அவள் தாத்தாவுக்கும் கொஞ்சம் பழக்கமுண்டு. தன்னை இன்னார் என்று விவரம் கூறியதும் இனங் கண்டு கொண்ட வெள்ளையத் தாத்தா பஞ்சாலை மேஸ்திரியிடம் அவளை அழைத்துச் சென்று வேலை வாங்கிக் கொடுத்தார். கிழவனின் அன்பு பாஞ்சாலிக்குப் பாட்டன் நினைவைக் கொண்டு வந்தது.

பாஞ்சாலியும் சாமிக்கண்ணுவும் வந்த பிறகு கிழவனுக்குக் கூட கொஞ்சம் ஆறுதலாக இருந்தது.

மாதங்கள் பல பஞ்சாலையின் இயந்திர இரைச்சலுக்கு மத்தியில் ஓடி மறைந்தன.

ஒரு நாள் வேலை முடிந்து, வேர்த்து விறுவிறுத்துப் போன முகத்துடன் வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தாள் பாஞ்சாலி. உடம்பெல்லாம் தூசியும் பஞ்சுத் துணுக்குகளும் ஒட்டிக் கொண்டிருந்தன. வேகமாக வந்து கொண்டிருந்தவள் யாரோ பேர் சொல்லிக் கூப்பிடுவதைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள். வெள்ளை உடையில் சங்கிலித்தேவன் நின்று கொண்டிருந்தான். அந்தி மயங்கும் அந்த நேரத்தில் அவனைத் தனியாகப் பார்த்ததும் பாஞ்சாலிக்கு என்னவோ போல் இருந்தது. உடம்பெல்லாம் புல்லரித்தது.

"பாஞ்சாலி, உனக்கு என் மேலே கோபமாகத்தான் இருக்கும். என்னை மன்னித்து விடு. நான் உனக்குப் பெரிய கொடுமையைச் செய்து விட்டேன். குழந்தை சாமிக்கண்ணு சௌக்கியமா யிருக்கிறனா? ஐயோ, பாஞ்சாலி நீ வேலைக்குப் போகிறயா?" என்று கேட்டு விட்டுச் சங்கிலித்தேவன் கண்ணீர் உகுத்தான்.

பாஞ்சாலிக்குப் பேச நா எழவில்லை. அப்படியே துவண்டு தரையில் விழுந்தாள். சங்கிலித்தேவன் அவளை வாரி யெடுத்து அணைத்துக் கொண்டான். பிறகு இருவரும் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தனர்.

சங்கிலித்தேவனின் திடீர் மனமாற்றத்துக்குக் காரணம் யாருக்குமே தெரியாது. பாஞ்சாலியிடம் கூட அவன் அது பற்றி எதுவும் சொல்ல வில்லை. ஆனல் பாஞ்சாலிக்கு விஷயம் தெரியும்.

அக்கரைச் சீமையிலிருந்து திரும்பிய சங்கிலித்தேவன் நேரே பாஞ்சாலியைத் தேடிக் கொண்டு வரவில்லை. அவன் உள்ளத்தை முன்பே கொள்ளை கொண்டு விட்ட ரத்தினத்தைத்தான் தேடிக் கொண்டு வந்தான். அக்கரைச் சீமைக்குப் போய்விட்டு வந்த பிறகு, சங்கிலித்தேவன் ரத்தினத்திடம் ஒரு புதிய மாறுதலைக் கண்டான். அவள் இவனைச் சிறிதும் லட்சியம் செய்யாது புறக்கணித்து வருவது அவனுக்குத் தெரிந்தது. ஆனல் அன்று ஒருநாள் அவள் வீட்டில் அவன் முற்றிலும் எதிர்பாராத விதமாக, ஏட் சிங்காரமும் ரத்தினமும் குழைந்து பழகிக் கொண்டிருந்தார்கள். அந்தக் காட்சி சங்கிலித் தேவன் உள்ளத்தில் நல்லறிவைக் கொளுத்தி விட்டது. அவனையே நினைத்து உருகும் பாஞ்சாலியின் நினைவையும் பளிச்சிடச்செய்தது. அவன் மனத்தைக் கப்பிக் கொண்டிருந்த களங்கம் அந்த நினைவு ஒளியில் மறைந்தது. பாஞ்சாலியின் புதுவாழ்வும் அத் தருணத்திலேயே புத்தொளியோடு தொடங்கியது.

பாஞ்சாலி அடைந்த சந்தோஷம் இருக்கிறதே அதை வருணிக்கவே முடியாது! சாமிக்கண்ணு தந்தையைக் கண்டதும் ஆனந்தம் நிலை கொள்ளாமல் குதித்தான்.

தமிழ்ப் புத்தாண்டு பிறந்தது! பாஞ்சாலியின் வீட்டில் களிப்பு கரைபுரண்டு ஓடியது. பால் வடக்கு முகமாகப் பொங்கி இன்பத்தைக் குரவையிட்டு அழைத்தது.

---

# ஓக்ஸ் பாட்டரிகள் நீடித்த உழைப்பை அளிப்பதால், அவைகள் துரிதமாக விற்பனையாகின்றன!




**அதிகப்படியான**

**உறுதி**

நீடித்த உழைப்பிற்கு கடினமான ரப்பர் செலில் அடக்கம் செய்யப்பட்டுள்ளன.

**அதிகப்படியான**

**மின்சார சக்தி**

அதிகப்படியான மின்சார சக்தி அளிக்கும் பைபெர் கிளாஸ் ஸெப்பரேட்டர்கள் உள்ளன.

**அதிகப்படியான**

**தாங்கும் சக்தி**

கடின வேலைகளுக்கேற்ற பெரிய பிளேட்கள் அமைக்கப் பெற்றன.




## ஜார்ஜ் ஓக்ஸ் லிமிடெட்




இந்தியா முழுவதிலும் அங்கீகரிக்கப்பட்ட போர்ட் விநியோகஸ்தர்கள்

கிரூ க்வீன்ஸ் ரோடு, பம்பாய் 4

GO. 2886

# கன்னி

கன்னிப் பருவத்துப் பெண்மயிலே—உன்றன்
கட்டழ கெல்லாம்வீ ணாகுதடி

மின்னி ஒளிவிடும் மேனியளே—உன்றன்
மின்னலெ லாம்வீணே போகுதடி

பின்னிப் படர்ந்ததோர் காட்டினுள்ளே—வாசப்
பிச்சி மலர்க்கொடி பூத்ததுபோல்

மன்னி உயர்மலை உச்சியிலே—கொண்டு
வைத்ததோர் தீஞ்சுவைத் தேனடைபோல்
*கன்னிப் பருவத்துப் பெண்மயிலே!*

பாலை வனத்திலே பால்பொழியும்—குளிர்
பௌர்ணமிச் சந்திரன் தானேநீ

வேலைத் திரைக்குளே முத்துருக்கும்—ஒளி
விந்தை யழகுள்ள சிப்பியோநீ

நீலக் கடற்கரைத் தாழத்திலே—சென்று
நிற்கும் பவளக் கொடிபோலே

மூலை இருளினில் மூடிமறைந்தே—ஓ! ஓ!
மோகினிப் பெண்ணேவீ ணாகிறாய்
*கன்னிப் பருவத்துப் பெண்மயிலே!*

கண்மணி யேஇளங் காரிகையே—உன்றன்
கன்னிப் பருவம்வீண் போகுதேடி

பெண்மணி யேஎழிற் பெண்மயிலே—உன்றன்
பெண்மையெ லாம்த்சோ! வீ ணாகுதேடி!

---

['இளவேனில்' கவிதைப் புத்தகத்திலிருந்து]

சோமு

மணியம்

சித்திரகூட பர்வதத்தில் லக்ஷ்மணன் ஒரு அழகிய
பர்ணசாலையை அவர்கள் தங்கியிருப்பதற்காக நிர்
மாணித்து விட்டான். அந்த அற்புதமான பர்ணசாலை
யைப் பார்த்ததும் ராமன் கண் கலங்கி நின்றான்.
லக்ஷ்மணனது கைத்திறனை வியந்த வண்ணம், "தம்பி!
கருசை கட்டும் இந்த அழகிய கலையை என்று நீ
ஓவிக் கொண்டாய்!" என்று கேட்கும் பாவத்தை
......ரியம் வண்ண ஓவியமாக வழங்குகிறார்.
குன்று ........இனையவத் பார்த்(து),' இரு
என்று ...ரக் குவலிய நோனினும்!
துன்று ...நீயிது போல்?' என்றான்,—
...க் கண்பனி சோர்கின்றான்



# உதயம்!




பொழுது புலருமடி – மனப்
பூவும் மலருமடி!
அழுத இருளெல்லாம் – கண்ணே
அகலும் அகலுமடி! — இளவேனில்



ஒரு பழைய வேப்பமரம். அதன் பக்கத்தில் ஒரு சிறு வேப்பஞ் செடியும் நன்றாகத் தள தளவென்று வளர்ந்து கொண்டிருந்தது.

"அம்மா! நானும் உன்னைப் போலவே கசப்பாகத்தான் வளருவேனா?" என்றது செடி.

"வேறு எப்படி வளர்வாய்? அப்படித் தான் வளருவாய். அது உனக்குச் சம்மதமில்லையா?" என்றது கிழ வேம்பு.

"மருந்துக்கும் மந்திரத்துக்கும் தான் உன்னிடம் எல்லாரும் வருகிறார்கள். ருசித்து வந்தவர்கள் யாரையும் நான் காணவில்லையே!" என்றது செடி.

"மருந்தும் மந்திரமும்தானே துக்கத்தைத் தீர்க்கும். தித்திக்கும் பழம் என்ன தரும்? நிலையான சுகத்தைத் தராது. நான் இருக்கும் நிலை எனக்குத் திருப்தி. நீயும் அப்படியே இருப்பாய், குழந்தாய்!" என்றது தாய் மரம்.

"எனக்கு ஆசையாக இருக்கிறது. நல்ல கறி வேப்பஞ் செடியாகத்தான் ஆகவேண்டும் என்று ஆசைப்படுகிறேன்" என்றது செடி.

"குழந்தாய்! வேண்டாம். என்னைப் போல் நீயும் நீண்ட ஆயுள் இருந்து சுகமாக இருப்பாய். பிறருடைய சுகம் நமக்கு வேண்டாம். அதைக் கண்டு ஆசைப் படுதலால் கேடு விளையும்" என்று மரம்சாஸ்திரம் சொல்லிற்று.

குழந்தைச் செடி கேட்கவில்லை.

# வேம்பின் தவம்

"நான் வேப்பமரம் ஆகமாட்டேன்" என்று தீர்மானித்தது. கணேசனைத் துதி செய்து வரம் பெற்று விட்டது. வேப்பஞ் செடி கறி வேப்பஞ் செடியாக வளர்ந்தது.

மூன்று அடி வளருவதற்குள் பக்கத்திலுள்ள வீட்டாரெல்லாம் செடியிலிருந்து சமையலுக்குக் கறி வேப்பிலை பறித்துக் கொண்டு போக ஆரம்பித்தார்கள். சிலர் கொஞ்சம் இரக்கத்துடன் முற்றிய இலையாகப் பறித்துக் கொண்டு போனார்கள். இளை இளையாகவே பறித்தார்கள் சிலர்.

சிலர் தேடி இளங் கொழுந்துகளையே பறித்துக் கொண்டு போனார்கள். அதுதான் சமையலுக்கு ருசி என்று இப்படிச் செய்தார்கள். மீதியிருந்த செடியை ஒரு நாள் ஆடு ஒன்று வந்து மேய்ந்து விட்டது!

மண்ணுக்குள் வேப்பம் வேர் இன்னும் இருந்தது. கணேச பகவானுடைய வரம் வேர் வரையில் போகவில்லை. கணேசனுக்கு இன்னது ஆகும் என்று முந்தியே தெரியுமல்லவா?

"அம்மா! நான் புத்தியடைந்தேன்" என்றது வேர், தாய் மரத்தைப் பார்த்து தீன சுவரத்தில்.

"இன்னும் இருக்கிறாயா, குழந்தாய்?" என்றது தாய் மரம்.

"அம்மா போதும். நான் ஆசைப்பட்டது மடமை. கசப்பு மரமாக இருப்பதே மேல் என்பதைத் தெரிந்துகொண்டேன். எனக்குப் பிழைக்கும் வழி சொல்லித் தா" என்றது அந்த வேர்.

"மறுபடி கணேசனைத் துதி செய்!" என்றது மரம். "நானும் உனக்காகக் கேட்டுக் கொள்ளுகிறேன்." இவ்வாறு சொல்லிவிட்டு வேப்ப மரம் தன் முழுபக்தியும் செலுத்திக் குழந்தைக்காகப் பிரார்த்தனை செய்தது.

வேர் துளிர்த்தது. வேப்பஞ் செடியாக நன்றாக வளர்ந்தது. ஊரார் கறிவேப்பிலைக்காக மறுபடியும் வந்தார்கள். சுத்தக்கசப்பாக இருந்ததைப் பார்த்துவிட்டுத் திரும்பிச் சென்றார்கள். செடியை வளர விட்டு விட்டார்கள். ஊர்க் கோழிகள் வந்து செடியின்கீழ் தலையைக் கீறியும் கொத்தியும் கொடுத்தன. அவை புழுக்கள் தேடிக் கீறின. ஆனால் அது செடிக்கு நல்லதாயிற்று. வேகமாக வளர்ந்தது. கொழுந்துகளைப் பிடுங்கிப் போவார் யாருமில்லை. தாய் மரத்தின் பூவும் அதன் மேல் சந்தோஷமாக உதிர்ந்தது.






பெண் குலத்திற்குப் பேருதவி செய்கிறது!

# சமைத்துப் பார்

(குடும்ப சமையல் புத்தகம்)

"ஒவ்வொரு குடும்பப் பெண் மணியிடமும் இருக்க வேண்டிய புஸ்தகம்" எனப் பலராலும் பாராட்டப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| முதற் புத்தகம் | ... ரூ. | 3-8-0 |
| இரண்டாம் புத்தகம் | ரூ. | 4-0-0 |
| திருமணப் பரிசுப் பதிப்பு | ரூ. | 10-0-0 |

தபால் செலவு தனி

பிரபல புத்தக வியாபாரிகளிடமும், ரயில்வே புத்தக ஸ்டால்களிலும் கிடைக்கும்.

*

ஆசிரியை:

எஸ். மீனாட்சி அம்மாள்

99, பிராடீஸ் ரோடு, சென்னை-28

உலக மார்க்

அசல் ஷண்முகம் பட்டணம் பொடி




**ORIGINAL SHUNMUGAM SNUFF (ESTD-1839) CO.**
**POST BOX 140 MADRAS-1**

# நீரிழிவு

## குணமாகும்

சிறு நீரில் சர்க்கரை காண்பது நீரிழிவு (DIABETES) நோயின் முக்கிய அறிகுறியாகும். உங்களுக்குப் பசியும் தாகமும் அதிகமாயிருந்தாலும், உடல் உருகிக் கொண்டு வந்தாலும், அடிக்கடி நீர் இறங்கினாலும் உங்களுக்கு நீரிழிவு நோய் இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. இக்கொடிய உடல் உருக்கி நோய், தான் பற்றினவர்களைக் கடைசி மூச்சு உள்ளவரையில் விடுவதில்லை; கொஞ்சம் கொஞ்சமாக அவர்களை மரண வாயிலுக்கு இழுத்துச் சென்று விடும். நீரிழிவு வியாதியைக் குணப்படுத்த இஞ்செக்ஷன்கள் போடப்படுகின்றன; ஆனால் அவற்றினால் வியாதி கொஞ்சமும் குணமாவதில்லை. மேற்படி இஞ்செக்ஷன்கள் நீரில் சர்க்கரையை குறைக்கின்றன — அதுவும் மருந்துச் சக்தி உள்ள வரையில்தான். ஆகவே, உபாதைகளைத் தடுக்க வாழ்நாள் முழுவதும் ஊசிகள் போட்டுக்கொள்ள வேண்டியதுதான். இதனால் அதிகச் செலவு ஏற்படுவது மட்டுமல்லாது உடலுக்கு கஷ்டம் உண்டாகிறது. நோய் குணப்படுத்தாது போனால் நீங்கள், புண்களினாலும், கண் நோய், பல்நோய், வயிற்றுக் கோளாறு முதலிய பலவித வேதனைகளால் சிரமப்பட நேருகிறது.

நீரிழிவு வியாதியை, வீனஸ் சார்ம் மாத்திரைகளை உபயோகித்து, சிக்கனமாகவும், சுலபமாகவும், நிச்சயமாகவும், பத்திரமாகவும் சிகிச்சை பெறுங்கள்.

பண்டைக்கால யுனானி வைத்திய முறைகளைக் கொண்டு, அரிய மூலிகைகளின் சேர்க்கையுடன் தயார் செய்யப்படும் வீனஸ் சார்ம் மாத்திரைகள், நோயை அடியோடு அகற்றுவதுடன், எத்தனையோ பேர்களை இன்செக்ஷன் அல்லது ஒருவிதமான பட்டினி இல்லாமல் குணமாக்கி யிருக்கிறது. இதை உபயோகித்து பல ஆயிரக்கணக்கானவர்கள், இக்நோயின் மரணப் பிடியிலிருந்து தப்பி யிருக்கிறார்கள். இம் மருந்தை உபயோகிக்கத் தொடங்கிய இரண்டு மூன்று நாட்களுக்கெல்லாம், நீரில் சர்க்கரை குறைகிறது; அத்துடன் அதிக நீர் இறங்குவதும் நிற்கிறது. சில நாட்கள் உபயோகித்தாலே நோய் தணிந்து திருப்தி ஏற்படுகிறது. வீட்டிலிருந்தபடி வீனஸ் சார்ம் சிகிச்சையைத் துவங்குங்கள். விசேஷ பத்தியம் எதுவும் இல்லை. நீங்களே அதன் குணத்தை அறிவீர்கள். இதுபற்றிய விரிவான இலவச ஆங்கிலப் பிரசுரத்தை வரவழைத்துப் பாருங்கள்.

**50 மாத்திரைகள் கொண்ட புட்டி ஒன்றின் விலை 6-12-0**

(பாக்கிங் தபால் செலவு இனாம்)

**வீனஸ் ரிஸர்ச் லாபரேட்டரி (K. M.)**

தபால் பெட்டி நெ. 587, கல்கத்தா



# பர்மா ரமணி

அழ. வள்ளியப்பா




## 40. தலைக்கு ஆபத்து!

ரமணியைப் பார்த்து வரச் சென்றானே சுப்பையா, அவன் அன்று முழுவதும் திரும்பி வரவில்லை. மறுநாளும் வரவில்லை. தலைவன் ஒவ்வொரு நிமிஷமும் சுப்பையாவை எதிர்பார்த்துக் கொண்டேயிருந்தான். அவன் வராததால், அவனுக்குப் பலபல சந்தேகங்கள் தோன்றின. "ஒருவேளை சுப்பையா அகப்பட்டுக் கொண்டிருப்பானோ! இருக்காது. அவன் தந்திரசாலி. சமயம் பார்த்துக் கொண்டிருக்கிறான் போலிருக்கிறது. எதற்கும் நாளைக் காலை வரையில் பார்க்கலாம். இல்லாத போனால், யாரையாவது அனுப்பலாம்" என்று நினைத்தான்.

இரவு மணி சுமார் பத்து இருக்கும். குகைக் கதவு திறக்கும் சத்தம் கேட்டது. உடனே தலைவனும், மற்றவர்களும் ஓடிப்போய்ப் பார்த்தார்கள். சுப்பையா தான் வந்துகொண்டிருந்தான். அவனைக் கண்டதும், "என்ன சுப்பையா, வெறும் கையோடு திரும்பி வருகிறாயே! அந்தப் பையனைப் பார்க்கவில்லையா?" என்று ஏமாற்றத்தோடு கேட்டான் தலைவன்.

"பார்த்தேன். அந்தப் பங்களாவில் தான் அவன் இருக்கிறான். ஆனால், எப்படி அங்கே போய்ச் சேர்ந்தான் என்பது யாருக்குமே தெரியவில்லை. நம்மைப் போலவே எல்லோரும் ஆச்சரியப் படுகிறார்கள். அவனை நேற்று இரவே கொண்டு வந்து விடவேண்டும் என்று நினைத்தேன். ஆனால், அவன் அப்பா மிகவும் உஷாராக இருக்கிறார். இரவெல்லாம் தூங்காமல் விழித்துக் கொண்டேயிருந்தார். இன்றைக்கும் அப்படித்தான் இருப்பார். ஆகையால், நாம் அவரை நாளை இரவே அந்தப் பங்களாவை விட்டுக் கிளப்புவதற்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்ய வேண்டும்" என்றான் சுப்பையா.

"என்ன ஏற்பாடு செய்வது?"

"அதெல்லாம் காலையில் யோசித்துச் சொல்கிறேன். இரண்டு நாட்களாகப் பட்டினி. தூக்கமும் இல்லை. ஒரே களைப்பாக இருக்கிறது. சாப்பாடு இருந்தால் கொடுங்கள். சாப்பிட்டுவிட்டுத் தூங்க வேண்டும்."

உடனே சுப்பையாவுக்குச் சாப்பாடு கொண்டு வரப்பட்டது. சுப்பையா சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது தலைவன் அவனைப் பார்த்து, "சுப்பையா! அந்தப் பையன் நாம் இருக்கும் இடத்தைப் போலீஸாரிடம் சொல்லி, நம்மைப் பிடித்துக் கொடுத்து விடுவானோ!" என்று மிகுந்த சந்தேகத்தோடு கேட்டான்.

"சேச்சே, அந்த வம்புக்கெல்லாம் அவர்கள் போக மாட்டார்கள். போலீஸில் சொன்னால், நம்மால் ஏதாவது தொந்தரவு ஏற்படும் என்று அவர்கள் பயந்து போயிருக்கிறார்கள். அவர்களாவது, போலீஸில் சொல்வதாவது!"

## வாத்தின் கணக்கு !




மேலேயுள்ள நான்கு பெருக்கல் கணக்குகளையும் பெருக்குங்கள். தனித்தனியாக அதன் எண்களுக்குப் பதிலாகச் சமமான எழுத்துக்களைப் போட்டுக் கொள்ளுங்கள். மொத்த எழுத்துக்களையும் சேர்த்துப் படித்துப் பாருங்கள். அந்த வாக்கியமே தமிழ் நாட்டுக் குழந்தைகளுக்குக் 'கல்கி' அளிக்கும் பரிசாகும். — விடை 120-ம் பக்கம் பார்க்க.

---

"அப்படியா! நல்ல காலம். சரி, சாப்பிட்டு விட்டுத் தூங்கு. காலையில் யோசிப்போம்" என்றான் தலைவன்.

அன்று இரவு குகையில் எல்லோரும் தூங்கிக் கொண்டிருந்தார்கள். சுந்தரமும் தூங்கிக் கொண்டுதான் இருந்தான். இரவு மணி இரண்டு இருக்கும். அப்போது ஓர் உருவம் மெதுவாகச் சுந்தரத்தின் அருகே வந்தது. சுற்றுமுற்றும் பார்த்து விட்டுக் கீழே குனிந்தது. மெதுவாகச் சுந்தரத்தைத் தூக்கித் தோள் மேல் போட்டுக்கொண்டு அடிமேல் அடி வைத்து நடந்தது. பத்தடி தூரம்கூடப் போகவில்லை. அதற்குள் சுந்தரம் விழித்துக் கொண்டு விட்டான்.

"யாரது என்னைத் தூக்குவது?" என்று உரத்த குரலில் கேட்டான்.

சத்தத்தைக் கேட்டதும், தலைவன் திடுக்கிட்டு எழுந்தான். சத்தம் வந்த திசையைப் பார்த்தான். அதற்குள் 'தட தட' வென்று யாரோ ஓடுவது தெரிந்தது. உடனே சுந்தரம் படுத்திருந்த இடத்தைத் தலைவன் பார்த்தான். சுந்தரத்தைக் காணோம்!

"ஆ! சுந்தரத்தையும் பறி கொடுத்து விட்டோமே!" என்று கூறிவிட்டு, "டேய், டேய். எழுந்திருங்கள். ஆபத்து ஆபத்து!" என்று கத்தினான். உடனே எல்லோரும் திடுக்கிட்டு எழுந்தார்கள். "எவனோ சுந்தரத்தைத் தூக்கிக் கொண்டு ஓடுகிறான். வாருங்கள். விடக் கூடாது அவனை" என்று கூறிக் கொண்டே தலைவன் முன்னால் வேகமாக ஓடினான். மற்றவர்களும் பின் தொடர்ந்து ஓடினார்கள்.

குகைக் கதவு 'ஆ'வென்று திறந்து கிடந்தது. அதைக் கடந்து எல்லோரும் வெளியில் வந்து பார்த்தார்கள். சுந்தரத்தைத் தூக்கிக்கொண்டு யாரோ ஓடுவது தெரிந்தது. மங்கலான நிலா வெளிச்சத்தில், அவன் யாரென்பது சரியாகத் தெரியவில்லை. தலைதெறிக்க ஓடிக் கொண்டிருந்த அவனைக் கண்டதும், "அயோக்கியன்! இவன்தான் ரமணியையும் தூக்கிச் சென்றிருப்பான். இவனைச் சும்மா விடக் கூடாது. உம், வாருங்கள், வாருங்கள்" என்று கூறிக் கொண்டே தலைவன் அவனைத் துரத்தினான். மற்றவர்களும் துரத்தினார்கள்.

சுந்தரத்தைத் தூக்கிச் சென்றவன் ஓட்டத்திலே பெரிய புலியாயிருக்க வேண்டும். இல்லாத போனால், சுந்தரத்தையும் தூக்கிக் கொண்டு அவ்வளவு வேகமாக ஓடமுடியுமா? கரடு முரடான காட்டுப் பாதையிலும் அவன் காற்றாய்ப் பறந்து சென்றான். முரடர்களும் விடவில்லை. துரத்திக்கொண்டே ஓடினார்கள்.

## குட்டித் தமாஷ்!





சாப்பிடுபவர் :— என்னய்யா இது அக்கிரமம்! ஓரணாவுக்கு நேற்று 36 காராபூந்தி கொடுத்தீங்க. இன்று முப்பதுதான் கொடுக்கிறீங்களே!

* * *

முயல் :—அந்தத் திருட்டுக் கேஸிலே மிச்சப் பயல்கள் எல்லாம் பிடிபட்டு விட்டான்கள். அந்த நெருப்புக் கோழிப் பயல் மாத்திரம் தலை மறைவா இருக்கான்!



* * *



"போயிட்டு வரேன்......உனக்குப் பணக் கஷ்டமான நிலைமை ஏற்பட்டால் உடனே எனக்குக் கடிதம் போடு......பணம் இல்லாமலே அந்த நிலைமையை எப்படிச்சமாளிப்பது என்று உனக்குப் பதில் கடிதம் எழுதுகிறேன்."

குமார் ஒரு மணி நேரம் அப்படி ஓடியிருப்பார்கள். போகப் போகச் சுந்தரத்தைத் தூக்கிச் சென்றவனுடைய வேகம் குறைய ஆரம்பித்தது. ஆரம்பத்தில் அவனுக்கும், மற்றவர்களுக்கும் இடையே இரண்டு பர்லாங்கு தூரம் வித்தியாச மிருந்தது. ஆனால், அந்த வித்தியாசம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து கொண்டே வந்தது. 'இன்னும் சிறிது நேரத்தில் அவன் பிடிபட்டு விடுவான்' என்றே முரடர்கள் நினைத்தார்கள். நினைத்ததோடு விடவில்லை, வழியிலே கிடந்த கற்களை எடுத்து அவனைக் குறி பார்த்து எறியவும் ஆரம்பித்தார்கள். அவனுடைய முதுகிலும், பின் கால்களிலும், கற்களைப் பலமாக எறிந்து அவனுக்குக் காயம் உண்டாக்கினார்கள். கல்லடி விழும்போதெல்லாம் அவன் பல்லை இறுக்கிக் கடித்துக் கொள்வான். சில சமயங்களில், 'உஸ்' 'அப்பா' என்று முனுமுனுப்பான். ஆனாலும், ஓட்டத்தை நிறுத்தவில்லை. சுந்தரத்தின் மீது அடிபட்டு விடக் கூடாதே என்று அவனை மார்போடு அணைத்துக் கொண்டு இரைக்க இரைக்க வேகமாக ஓடினான். அப்போது சுந்தரம், "இந்த மனிதர் நம்மைக் காப்பாற்றத்தான் குகைக்குள் வந்திருக்கிறார். சந்தர்ப்பம் தெரியாமல் 'யார் தூக்குவது?' என்று கேட்டுக் காரியத்தைக் கெடுத்து விட்டேனே! ஐயோ! என்னால் இவருக்கு எவ்வளவு சிரமங்கள், பாவம்! அந்த முரடர்கள் கல்லால் அடிக்கிறார்கள். ஆனாலும், அவர் நிற்கவில்லை. என்னை எவ்வளவு பத்திரமாகத் தூக்கிச் செல்கிறார்! ரமணியையும் இவர்தான் காப்பாற்றி யிருக்க வேண்டும். இவ்வளவு நல்ல மனிதர் யாரா யிருக்கும்? உற்றுப் பார்த்தேன். ஆனாலும், அடையாளமே தெரியவில்லையே!" என்றெல்லாம் நினைத்தான்.

அதே சமயம், "ஐயோ! முரடர்கள் நெருங்கி விட்டார்கள் போலிருக்கிறதே! என்ன ஆகுமோ! எப்படி ஆகுமோ!" என்றும் சுந்தரம் நடுநடுங்கினான்.

ஒரு வழியாகக் காட்டைக் கடந்து மாந்தலைக்குச் செல்லும் பெரிய சாலைக்கு வந்து விட்டான் அந்த மனிதன். அப்போது அவனுக்கும் முரடர் தலைவனுக்கும் இடையிலே நூறடி தூரம்கூட இல்லை. "இதோ ஒரு நொடியில் அவர்களைப் பிடித்து விடுகிறேன்" என்று கூறிக் கொண்டே தலைவன் வெகு வேகமாக நெருங்கினான். அதே சமயம், 'பாம், பாம்' என்று சப்தத்துடன் சிறிது தூரத்தில் ஒரு லாரி வந்து கொண்டிருந்தது. லாரியைக் கண்டதும், சுந்தரமும் அந்த மனிதனும் 'இனித் தப்பி விடலாம்' என்ற நம்பிக்கையைப் பெற்றார்கள். ஆனால், முரடர் தலைவனோ, "நாசமாய்ப் போகிற லாரி இந்த நல்ல சமயத்திலா வரவேண்டும்?" என்று ஆத்திரப்பட்டான். அந்த ஆத்திரத்தில் கையிலிருந்த ஒரு கூரான கல்லை அந்த மனிதனின் தலையைக் குறி பார்த்து எறிந்து விட்டுத் திரும்பி ஓடிவிட்டான் தலைவன். அவன் எறிந்த கல் குறி தவறாமல், அந்த மனிதனின் தலையைப் பலமாகத் தாக்கியது. மறு நிமிஷம், 'ஆ!' என்று கத்திக் கொண்டே சுந்தரத்தைப் போட்டு விட்டுத் 'தொப்'பென்று கீழே விழுந்தான் அவன். (தொடரும்)

ருஷ்ய நாட்டு நாடோடிக்கதை

# இளவரசி மரியா

மொழிபெயர்ப்பு: எஸ்.வி.எஸ்

## 1

முன்னொரு காலத்தில் ஒரு நாட்டை ஒரு ஸார் (அரசன்) ஆண்டு வந்தான். அவன் வெகு நாட்கள் கல்யாணம் செய்து கொள்ளாமலே இருந்து வந்தான்.

அவனிடம் வில் வித்தையில் தேர்ந்த ஆண்ட்ரி என்றொரு வீரன் வேலை செய்து வந்தான். அவனுடைய முக்கியமான வேலை அரசனுடைய சாப்பாட்டுக்கு, காட்டில் பறவைகளையும் மிருகங்களையும் வேட்டையாடிக் கொண்டு வந்து கொடுப்பது.

ஒரு நாள் காட்டில் எவ்வளவு அலைந்தும் ஆண்ட்ரிக்கு ஒரு வேட்டையும் கிடைக்கவில்லை. பகல் பொழுதெல்லாம் அலைந்து அலைந்து கால்கள் சோர்ந்தனவே தவிர, ஒன்றும் கிடைக்கவில்லை. சாயங்காலம் ஆகிவிட்டது. பொழுது சாயும் நேரமும் நெருங்கி வந்துகொண்டிருந்தது. அப்போது திடீர் என்று அவன் கண்களில் ஒரு வேட்டை தட்டுப்பட்டது.

ஒரு மரத்தின் கிளை மீது அழகிய புறா ஒன்று உட்கார்ந்திருந்தது. ஒன்றுமில்லாததற்கு இதையாகிலும் கொண்டு போவோம் என்று ஆண்ட்ரி குறி பார்த்து ஒரு அம்பை எய்தான். அம்பு புறாவின் ஒரு சிறகைப் பிய்த்துக் கொண்டு போயிற்று! ஒரு சிறகை இழந்த அந்தப் புறா ஈரத் தரையில் 'தொப்' பென்று விழுந்தது.

தரையில் விழுந்த புறாவை எடுத்துக் கழுத்தைத் திருகித்தன் வேட்டைப் பையில் போடப் போனான்! அப்போது புறா மனிதக் குரலில் கணீரென்று பேசத் தொடங்கி விட்டது :—



"ஐயா, வீரரே! ஆண்டிரியே! தயவு செய்து என்னைக் கொல்லாதீர்கள். என் சின்னஞ் சிறு கழுத்தைத் திருகி வதைக்காதீர்கள்! என்னை அப்படியே எடுத்துச் சென்று உங்கள் வீட்டில் கொண்டு போய் ஜன்னலில் வையுங்கள். நான் கொஞ்ச நேரத்தில் தூங்கிப் போவேன். தூங்கியவுடன் உங்கள் வலது கையால் என்னை மெதுவாகத் தட்டுங்கள். அவ்வளவுதான்; அடுத்த கணம் உங்களுக்குப் பேரதிர்ஷ்டம் ஏற்படும்!" என்றது.

ஆண்டிரிக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. "இது என்ன? பார்க்க அசல் புறா மாதிரியே இருக்கிறது. எனினும் மனிதக் குரலில் பேசுகிறதே!" என்று அவன் அதிசயித்தான்.

அதை வீட்டுக்குக் கொண்டு போனான். புறா சொன்னது போலவே அதை ஜன்னலில் வைத்தான். அது தூங்கும் வரை எங்கும் போகாமல் அதன் பக்கத்திலேயே நின்று கொண்டிருந்தான்.

ஆண்டிரி புறாவை ஜன்னலில் எடுத்து வைத்ததும், புறா தன் தலையை மற்றொரு சிறகில் செருகிக் கொண்டு தூங்க முயன்றது. சீக்கிரத்திலேயே தூங்கிப் போய் விட்டது. புறா சொன்னதைச் சரியாக ஞாபகப் படுத்திக் கொண்டு ஆண்டிரி தனது வலக் கரத்தினால் புறாவைத் தட்டினான். ஆண்டிரியின் கை பட்ட



மாத்திரத்தில் புறா தரையில் விழுந்து விட்டது! தரையில் விழுந்த வுடனேயே எவ்வுலகிலும் காண முடியாத பேரழகு பெற்ற நங்கையாக மாறியது! அந்த அழகிய நங்கைதான் இளவரசி மரியா.

அந்த நங்கையின் அழகில் மயங்கி ஆண்டிரி அப்படியே நின்றான். அவனுக்குப் பேச நா எழவில்லை. வார்த்தைகள் தொண்டையில் சிக்கித் திணறின!

இப்படி அங்கு நிலவிய மோன அமைதியை இளவரசி மரியாவே கலைத்தாள்.

"நான் சர்வ சுதந்திரமாகக் காட்டில் யாருக்கும் தெரியாமல் பறந்து திரிந்து கொண்டிருந்தேன். நீங்கள் எப்படியோ என்னைப் பிடித்து விட்டீர்கள்! இனி நீங்களே என்னை வைத்துக் கொள்ளுங்கள். நானே உங்களுடையவளாகி விட்டேன். நீங்கள் என்னை மணந்து கொள்ளுங்கள். உங்கள் உண்மை மனைவியாக இருப்பதுடன், உங்கள் வாழ்வில் இன்பமும் மகிழ்ச்சியும் பெருக வைக்க என்னாலியன்றதை யெல்லாம் செய்கிறேன்!" என்றாள்.



இதைக் கேட்ட பிறகு ஆண்டிரி சொல்வதற்கு ஏதாகிலும் இருக்குமா, என்ன!

ஆண்டிரி இளவரசி மரியாவை மணந்து கொண்டான். இருவரும் இன்ப வாழ்க்கை நடத்தி வந்தனர்.

ஆண்டிரி தான் பெற்ற புது வாழ்வின் இன்பத்தில் மூழ்கித் தன் கடமையை மறக்கவில்லை. வழக்கம்போல் விடியற்காலை எழுந்திருந்து காட்டுக்குப் போய் வேட்டையாடி அரசனின் சாப்பாட்டுக்கு வேண்டியதைச் சமையலறையில் கொண்டு போய்ச் சமர்ப்பித்து வந்தான்.

இப்படிப்பட்ட வாழ்க்கையில் என்ன பிரமாத சுக சௌகரியங்கள் இருந்துவிட முடியும்? ஒன்றுமில்லை.

ஒரு நாள் இளவரசி மரியா, தன் காதலனைப் பார்த்து "ஆனாலும் ரொம்ப நம் வறுமையில் வாழ்ந்து வருகிறோம், இல்லையா, ஆண்டிரி?" என்றாள்.

இதைக் கேட்ட ஆண்டிரி "ஆமாம், நீ சொல்வது உண்மைதான் போலிருக்கிறது, மரியா!" என்றான்.

"அப்படியானால் நான் ஒரு வழி சொல்கிறேன், கேட்கிறீர்களா? நீங்கள் யாரிடமாகிலும் நூறு ரூபிள்கள் (ருஷ்ய நாணயங்கள்) கடன் வாங்கிக் கொஞ்சம் பட்டுத் துணிகள் வாங்கி வாருங்கள்! நான் அவற்றை வைத்துக் கொண்டு நம் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கு வழி தேடுகிறேன்!" என்று கூறினாள்.

ஆண்டிரி தன் மனைவி சொன்னபடி கடன் வாங்கப் போனான். தன் நண்பர்கள் ஒவ்வொருவரிடமும் இரண்டு, மூன்று ரூபிள்கள் வீதம் கடன் வாங்கி நூறு ரூபிள்கள் திரட்டினான். அதைக் கொண்டு பட்டுத் துணிகள் வாங்கித் தன் மனைவியிடம் கொடுத்தான்.

அதை வாங்கிக் கொண்ட மரியா மிகுந்த மகிழ்ச்சி அடைந்தாள். "இனி நீங்கள் படுத்துக் கொள்ளப் போங்கள். நான் இன்றிரவு இவற்றை வைத்துக் கொண்டு ஏதாகிலும் செய்யப் பார்க்கிறேன். ஏனெனில் இரவுதான் யோசனைகளுக்கும் உபாயங்களுக்கும் தாயார்!" என்று சொல்லி ஆண்டிரியைப் படுக்க அனுப்பி விட்டாள் மரியா.

அன்றிரவெல்லாம் கண் விழித்து உட்கார்ந்து ஒரு அழகான பட்டுச் சால்வை தயாரித்தாள். அந்தப் பட்டுச் சால்வையில் அந்த நாட்டின் படத்தையே வரைந்து விட்டாள். அந்த நாட்டிலுள்ள அழகிய ஊர்கள், நந்தவனங்கள், மாளிகைகள், பறவைகள், மீன்கள், விலங்குகள், கடல்கள் எல்லாம் வரைந்து விட்டாள்.

பொழுது விடிந்து ஆண்டிரி எழுந்தான். இரவு முழுவதும் கண் விழித்திருந்து தன் மனைவி பின்னிய அழகிய பட்டுச் சால்வையைக் கண்டு அதிசயித்து நின்றுவிட்டான்.

ஆனால் மரியாவோ, "இதை நீங்கள் கடை வீதிக்குக் கொண்டு போய் விற்று வாருங்கள். ஆனால் ஒன்று. இதன் விலை என்னவென்று யாராவது கேட்டால் நீங்கள் சொல்லாதீர்கள். அவர்கள் கொடுக்கும் விலையை வாங்கிவாருங்கள்!" என்றாள்.

ஆண்டிரி அந்தப் பட்டுச் சால்வையை எடுத்துத் தன் கையில் மடித்துப் போட்டுக் கொண்டான். கம்பீரமாகக் கடை வீதியை நோக்கிப் புறப்பட்டுப் போனான்.

கடைத் தெருவில் ஆண்டிரியைப் பார்த்ததும் ஒரு வியாபாரி ஓடோடியும் வந்தார்.

"ஐயா! இந்தச் சால்வையின் விலை என்ன?" என்று கேட்டார்.

ஆண்டிரி, "ஐயா, நீரோ வியாபாரி! உமக்குத் தெரியாதா இது எவ்வளவு பெறும் என்று? நீரே இதற்கு ஒரு விலை சொல்லும்!" என்றான்.

வியாபாரி சால்வையைத் தொட்டுத் தொட்டுப் பார்த்து ரொம்ப நேரம் யோசித்

# எமது

# தமிழ்ப் புது வருஷ

# வாழ்த்துக்கள் !




## சூரியன் மார்க்கு

உயர்ந்த ரக **மைதா** (கோதுமை மாவு)

**சூஜி** (ரவை) - **ஆட்டா** மாவு




தயாரிப்பவர்கள் :

**செஞ்சுரி பிளவர் மில்ஸ் லிமிடெட்,**

மானேஜிங் ஏஜண்டுகள் :

**சௌந்தரராஜன் & கம்பெனி லிமிடெட்,**

221, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-1

போன் : 4165 தபால் பெட்டி 1558 தந்தி : MATHOORAN

உங்களது தொடர்ந்த அன்பும் ஆதரவும் எங்களுக்கு உற்சாகமும், ஊக்கமும் தந்து எங்கள் பொருள்களின் உற்பத்தியை அதிகரிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்யத் தூண்டியிருக்கின்றன என்பதை நன்றியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

EP

தார். அவரால் அதன் விலையை நிர்ணயிக்க முடியவில்லை. இதற்குள் நாலா பக்கங்களிலிருந்தும் வியாபாரிகள் வந்து சூழ்ந்து கொண்டு விட்டார்கள். அவர்களும் சால்வையின் அழகில் மயங்கி மயங்கி நின்றார்களே ஒழிய அதன் மதிப்பை நிர்ணயிக்க முடியாமல் திணறினார்கள்.

இந்தச் சமயத்தில் அந்த வழியாக ஸாரின் அந்தரங்க மந்திரி தமது பெட்டி வண்டியில் போய்க் கொண்டிருந்தார். அவர் தெருவில் வியாபாரிகள் கூட்டமாகக் கூடி நின்று ஏதோ பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்து விட்டு வண்டியை விட்டு இறங்கினார். கூட்டத்தைத் தமது முழங்கைகளினால் தள்ளி வழி செய்து கொண்டு, "இங்கு ஏன் இவ்வளவு கூட்டம்? என்ன விசேஷம்?" என்று கேட்டுக் கொண்டே கூட்டத்தின் நடுவில் வந்து விட்டார்.

வியாபாரிகள் அந்த அழகிய பட்டுச் சால்வையை எடுத்துக் காண்பித்து, "எங்களால் இந்த அழகிய பட்டுச் சால்வைக்கு என்ன விலை கொடுக்கலாம் என்று மதிக்க முடியவில்லை" என்றார்கள்.

மந்திரி சால்வையைப் பார்த்தார். தொட்டுப் பார்த்தார். அதன் அழகில் அப்படியே சொக்கி நின்று விட்டார்!

பிறகு ஆண்டிரியைப் பார்த்து, "உண்மையைச் சொல்! உனக்கு எங்கிருந்து எப்படி இந்த ஆச்சரியமான பட்டுச் சால்வை கிடைத்தது? ஒன்றையும் ஒளிக்காமல் சொல்!" என்றார் மந்திரி.

"என் மனைவி பின்னிக் கொடுத்தான்" என்றான் ஆண்டிரி.

"இந்தப் பட்டுச் சால்வைக்கு என்ன விலை வேண்டும்?" என்று கேட்டார் மந்திரி.

"எனக்குத் தெரியாது. கொடுத்ததை வாங்கி வரும்படி என் மனைவி சொல்லியனுப்பினான்" என்றான்.

"அப்படியானால் இதோ பத்தாயிரம் ரூபிள்கள், வாங்கிக்கொள்!" என்றார் மந்திரி.

ஆண்டிரி பணத்தை வாங்கிக் கொண்டு சால்வையை அவரிடம் கொடுத்தான். வீட்டை நோக்கி நடந்தான்.

* * *

அந்தரங்க ஆலோசகரான மந்திரி நேரே அரண்மனைக்குப் போனான். தான் வாங்கி வந்த அழகிய பட்டுச் சால்வையை ஸார் அரசனிடம் காண்பித்தான்!

ஸார், தன் அரசு முழுவதும் அந்தச் சால்வையில் அழகாகப் பின்னப்பட்டிருப்பதைக் கண்டு பேரானந்தமும் பெரு வியப்பும் அடைந்தான்.

"மந்திரி! என்னைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டாலும் பரவாயில்லை. நான் இதை உனக்குத் தரவேமாட்டேன்"

110-ம் பக்கம் வெளியாகி உள்ள வாத்தின் கணக்குக்கு விடை:

2, 5, 8.; 10.; 7, 9, 0, 6, 4; 1, 8, 9, 3

தமிழ்ப் புத்தாண்டு வாழ்த்து.

என்று சொல்லி இருபதினாயிரம் ரூபிள்களை மந்திரியிடம் கொண்டுவந்து கொடுத்தான்.

'மன்னர் வேண்டுமானால் இதை எடுத்துக் கொள்ளட்டுமே. இதைவிட அழகிய பட்டுச் சால்வையை ஆண்டிரி மூலம், அவன் மனைவியைப் பின்னித் தரச் சொன்னால் ஆயிற்று' என்று நினைத்த வண்ணம் ஸார் கொடுத்த இருபதினாயிரம் ரூபிள்களை மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்டார் மந்திரி.

அடுத்த கணம் ஆண்டிரியின் வீட்டை நோக்கிப் புறப்பட்டார்.

ஆண்டிரியின் வீடு ஊரின் எல்லையி லிருந்தது. அங்கே அவன் வீட்டைத் தேடிக் கண்டு பிடித்தார் மந்திரி. வீட்டுமுன் வாசல் கதவு சாத்தி யிருந்ததால் கதவு தட்ட வேண்டியதாகி விட்டது. கதவு தட்டும் சத்தம் கேட்டு உள்ளே யிருந்த ஆண்டிரியின் மனைவி மரியா கதவைத் திறந்தாள். அவ்வளவுதான்; மந்திரி அவளது பேரழகில் மயங்கிச் சிற்பமாக நின்று விட்டார். ஆம், அவர் நா பேசும் சக்தியை இழந்து விட்டது. தாம் வந்த காரியமும் மறந்து விட்டது. 'இவளை ஆயுள் முழுதும் பார்த்துக் கொண்டிருந்தாலும் சலிக்காது போல் இருக்கிறதே!' என்ற நினைவுதான் அவர் மனத்தில் சுழன்று சுழன்று வந்தது.

மரியா சற்று நேரம் நின்று பார்த்தாள். வந்த மனிதர் தான் வந்த காரியத்தைப் பற்றி ஏதாகிலும் சொல்வாரோ என்று எதிர்பார்த்தாள். அவர் பேசும் வழியாகக் காணோம். எனவே அவள் படீர் என்று கதவைச் சாத்திக் கொண்டு உள்ளே போனாள்.

இப்பொழுதுதான் மந்திரிக்குச் சுய நினைவு வந்தது. வந்த காரியத்தை விட்டு விட்டு நேரே தமது வீட்டுக்குத் திரும்பிச் சென்றார். ஆனால் அன்றிலிருந்து அவருக்கு உணவு வேண்டி யிருக்க வில்லை; உறக்கம் பிடிக்கவில்லை. மரியாவின் உருவமே அவர் நினைவுத் திரையில் வந்து கொண்டிருந்தது.

மந்திரி கொஞ்ச நாட்களாகப் பித்துப் பிடித்தாற் போலிருப்பதைப் பார்த்தான் ஸார். 'இவருக்கு என்ன நேர்ந்து விட்டது?' என்று யோசித்தான். பிறகு அவரையே கேட்டான்.

மந்திரி, "அரசே! நம் அரண்மனையில் சேவகம் செய்யும் ஆண்டிரியின் மனைவியை ஒரு நாள் பார்த்தேன். அன்றையதினத்தி லிருந்து என்னால் அவளை மறக்கவே முடிய வில்லை. அவள் என் மனத்தைக் கவர்ந்து இழுத்து விட்டாள். அவளது மாய சக்தியி லிருந்து என்னால் விடுபடவே முடிய வில்லை!" என்றார்.

"அப்படியா! ஆண்டிரியின் மனைவி அவ்வளவு அழகியா? நானும் அவளை ஒரு முறை பார்த்து விட்டு வருகிறேனே" என்று நினைத்தான். அரச உடைகளை எல்லாம் கழற்றி வைத்து விட்டுச் சாதாரணப் பிரஜை போல் மாறு வேஷம் போட்டுக் கொண்டு போனான். ஊரின் எல்லையி லிருந்த ஆண்டிரியன் வீட்டை அடைந்தான். கதவைத் தட்டினான். இளவரசி மரியா வந்து கதவைத் திறந்தாள். அன்று மந்திரி எப்படி நின்றாரோ அப்படியே மன்னனும் இன்று மரியாவின் அழகில் மதிமயங்கிச் சிலைபோல் நின்று விட்டான்! மரியா சற்று நேரம் பார்த்தாள். வந்த மனிதன் தான் வந்த காரியம் என்னவென்று சொல்லும் வழியாகக் காணோம். படீர் என்று கதவைச் சாத்தித் தாளிட்டு விட்டு உள்ளே போனாள்.

இதிலிருந்து மூண்டது வினை. மன்னன் அவள்மீது அளவு கடந்த ஆசை வைத்து விட்டான். "நான் இனியும் எதற்காக ஒற்றைக் கட்டையாக வாழ வேண்டும்! இதோ இங்கே ஒரு அழகான மணப் பெண் இருக்கிறாள். இவள் ஸார் மன்னனின் மனைவியாக இருக்கவே பிறந்தவள். ஒரு சாதாரண விற் படை வீரனின் மனைவியாக இருப்பதற்குத் தகுதியானவளே அல்ல" என்று நினைத்தான்.

அவன் தன் அரண்மனைக்குத் திரும்பியதும், மன்னனின் மனத்தில் ஒரு கொடிய எண்ணம் உதித்தது. அவளை, அவள் புருஷனிடமிருந்து அபகரித்து வந்து விட்டால் என்ன என்று எண்ணினான். அடுத்த கணமே தனது மதி மந்திரியிடம் யோசனை கேட்க அவரை அழைத்து வரும்படி சொல்லியனுப்பினான்.

மந்திரி வந்ததும் வராததுமாக ஸார், "மந்திரி! இந்த ஆண்டிரியை ஒழித்துக் கட்ட ஒரு வழி சொல்லேன். நான் அவன் மனைவியைக் கலியாணம் செய்து கொள்ள விரும்புகிறேன். எனக்கு இதில் உதவினாயானால் உனக்கு நகரங்கள், கிராமங்கள் பொன் எல்லாம் தருகிறேன். உதவவில்லையென்றால் நான் உன் தலையைச் சீவி விடுவேன்!" என்றான். (தொடரும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi. Pa. Somasundaram.

# உங்கள் வீட்டுக்கு வேண்டியது விம்

## அப்பழுக்கின்றி விரைவில் சுத்தம் செய்யும்



விம் உபயோகித்து எப்போதாவது தரையை சுத்தம் செய்ததுண்டா? எவ்வளவு எளிதாக, துரிதமாக சுத்தம் செய்கிறது என்று பிரமித்துப்போவீர்கள். விஞ்ஞான முறையில் துலக்கும் பவுடர் விம். அழுக்கும் பசையும் அதை எதிர்த்து நிற்க முடியாது. ஒரு ஈரத்துணியில் விம் தூவி, தேய்த்தலம்பி, உலரவிட்டுப்பாருங்கள்—பளிச்சென்று எல்லாம் பரிசுத்த மயம்! மேலும் சமையலறை சாமான்கள், எவர்ஸில்வர், சாதாரண பீங்கான், கண்ணாடி சாமான்கள், வாஷ்பேஸின்கள், ஓடுகள் முதலியவைகளுக்கும் விம் உபயோகியுங்கள். அது சிக்கனமானதுகூட! சிறிதளவு விம் உபயோகித்தாலும் பரிசுத்தம் அதிகமாகச் செய்யும்.




சமையலறை சாமான்கள்



ஸ்டவ்கள்



வாஷ் பேஸின்கள்



**விஞ்ஞான முறையில் துலக்கும் பவுடர் விம்**

V. 89A-56 TM

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

ராஜ சுலோசனா
# லக்ஸ் டாய்லெட் சோப்
தேர்ந்தெடுக்கிறாள்

ஏனென்றால் அது தூய்மையானது, வெண்மையானது











சினிமா நட்சத்திரங்களின் தூய, வெண்மையான, அழகு தரும் சோப்

இந்தியாவில் தயாரித்தது

LTS. 476-50 TM